சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சி

# நன்றென்றும் வாழியவே !



வெண்பாவூர். திரு. பொ. திருஞானம் அவர்கள்,
மயிலம்.

கல்வியதை யாவருமே
கவனமுடன் கற்றிடவே
பல்கலையும் பாரினிலே
பரப்பியேதான் நாடோறும்
அல்லலினை அகற்றிடவே
அருளதனை அளித்துவரும்
வல்லவராம் அருணந்தி
அடிகளையே வாழ்த்துவமே ! (1)

அன்னார்தம் திருவருளால்
அழகுடனே தமிழ்நாட்டில்
கன்னித்தமிழ் கொஞ்சிடவே
குமரகுரு பரன் இதழே
பன்னருங்குக் காட்சியினால்
பலருளத்தைப் பண்படுத்தி
நன்னெறியைப் பரப்பியேதான்
நீடூழி வாழியவே ! (2)

பன்னிரண்டாம் யாண்டினையே
பார்புகழ எட்டியேதான்
அன்றிருந்த சமயநெறி
அன்புநெறி அடக்கமெலாம்
என்றிந்தப் பொருள்களிலே
இனிதுடனேக் கூறியேதான்
நன்றென்று போற்றிடவே
நீடூழி வாழியவே. (3)

[மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்]

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ

# உள்ளுறை

வரிசை எண் பொருள் பக்கம்

கட்டுரையாளர்

5-1

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை

# குமரகுருபரன்

மலர் 12 | சார்வரி-ஆ தைத்-திங்கள் 1-ம் உ (14-1-61) | இதழ் 1

## "குமரகுருபரன்" பன்னிரண்டாவது ஆண்டுத் தோற்றம்

### தோற்றுவாய்

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணியவர். (குமரகுருபரர்)

"குமரகுருபரன்" பதினொரு ஆண்டுகள் தன் கடமையைச் செவ்வனே ஆற்றிவந்து, இன்று பன்னிரண்டாவது ஆண்டு எய்துகிறுன்.

தன்னைத் தோற்றுவித்த திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் பேராதரவிலும் கண்காணிப்பிலும் அடிக்கடி அருள்பாலிக்கப் பெற்று

வரும் அறிவுரைகளின் துணைக்கொண்டும், வழிநின்றும் குமரகுருபரன் இப்பதினொரு ஆண்டுகளும் பொதுமக்களுக்கும், சிறப்பாக தன் சந்தா தார்களுக்கும் சீரிய தொண்டாற்றி அவர்களின் நன் மதிப்பையும் பெற்றுத் திகழ்வது மிக்க மகிழ்ச்சிக்குரியதேயாகும். திருச்செந்திலாண்டவன் கருணையாலும், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் ஆசியைக் கொண்டும் "குமரகுருபரன்" தன்பணியைச் சிறந்த முறையில் தொடர்ந்து செய்துவர பொதுமக்கள் சந்தாதார்கள், கட்டுரையாளர்கள், அபிமானிகள் முதலானவர்களின் ஒத்துழைப்பைப் பெரிதும் நாடி நிற்கின்றான்.

உலகில் பொதுவாக எல்லாப் பொருள்களின் விலைவாசியும் உயர்ந்திருக்கும் நிலைமையில் பத்திரிகைக்கு இன்றியமையாது அவசியமான தளவாடச் சாமான்களின் கிரயம் இப்போது பன்மடங்காக உயர்ந்திருப்பதின் காரணமாக மற்றெல்லாச் சஞ்சிகைகள், பத்திரிகைகளின் கட்டணம் உயர்த்தப் பெற்றிருப்பதும் வாசகர்கள் நன்கறிந்ததே. அந்த நிலைமையில் குமரகுருபரனின் சந்தாவைச் சிறிதேனும் உயர்த்த அனுமதி கேட்டு ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களுக்குச் செய்யப்பெற்ற விண்ணப்பம் அனுமதிக்கப் பெறாமல், தமிழகம் ஒவ்வொரு இல்லம் தோறும், தமிழ்த் திங்கள் முதல்நாள் "செந்திற்பதி புரக்கும் செவ்வேளின்" திருவுருவம் தாங்கிய நம் "குமரகுருபரன்" சென்று சென்று மக்களின் வாழ்வு நலமுறச் செய்ய வேண்டுமென்ற நோக்கமே திருவுளப்பாங்காகும் என்று அறிவுறுத்தியும் சந்தாத் தொகை உயர்த்துதல் வேண்டாமென்றும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் கட்டளை பிறந்திருக்கும் விபரம் வாசகர்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தமிழாக்கங் கருதியும், சைவசமயத் தொண்டின்பொருட்டும், சந்தாபாக்கி யிருக்கும் அன்பர்கள் சந்தாப்பாக்கியைச் செலுத்தியும், புதுவருடச் சந்தா இதுவரை செலுத்தாதவர்கள் உடன் செலுத்தியும், புதுச் சந்தாச் சேர்த்தும் "குமரகுருபரனு"க்குத் தங்கள் ஆதரவைப் பெருக்கப் பெரிதும் வேண்டுகின்றோம்.

"குமரகுருபரன்" தன் பன்னிரண்டாவது ஆண்டிலும், பருவத்திற்கு ஏற்ப மிகுந்த வன்மை, ஊக்கம், உறுதி வலுவுடன் வாசகர்களின் இலக்கிய அறிவுக்கும் சைவசமய அறிவுக்கும் சலியாது உழைத்துச் சிறந்தபணியாற்ற திருவருள் பாலிப்பதாகுக. தோற்று

5|-1

வித்ததோடல்லாமல், "குமரகுருபரனின்" சீரும் சிறப்புமே தம் கண்ணும் கருத்துமாய்ப் பேணி வளர்த்து அவசியம் கண்டவிடத்து "கடி தோச்சி மெல்ல எறிக" என்ற முறையில் அறிவுரைகள் வழங்கியும், நெறியினின்று வழுவாது எவர் மனமும் புண்படாத வண்ணம் கருத்துக்களை தெளிவாகவும் உறுதியுடனும் உரைக்கும் வழிவகுத்துக் கொடுத்தும், உற்சாகத்துடன் கூடிய ஊக்க முட்டியும், ஆங்கிலம், தமிழ், இந்தி மொழிகளிலுள்ள அரிய கட்டுரைகளின் நயம் எடுத்துணர்த்தியும், இப்புண்ணியத் திருப்பணியில் அடியேனை ஈடு படுத்தி ஆட்கொண்டருளும் தவப்பெருங் குருமூர்த்தியாம் நாம் வணங்கக் கிடைத்த "குமரகுருபர அடிகளுமான" ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திருவடித்தாமரை களில் சிரம் தோய வணங்கி, "குமரகுருபரன்" பன்னிரண்டாவது ஆண்டு மலரை அன்புக் காணிக்கையாகச் சமர்ப்பிக்கின்றேன்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய நூல்களுள் சிதம்பரச் செய்யுட் கோவையின் கட்டுரைகள் தொடர்ந்து எழுதி அரியபணி ஆற்றி வருபவர், தருமபுரம் ஆதீன வித்துவான் சித்தாந்த ரத்னகரம் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் ஆவர். அவர்கள் கட்டுரைகள் வழக்கம்போல் தொடர்ந்துவரும். அண்ணமலைப் பல் கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர், பேராசிரியர் திரு. G. சுப்பிரமணிய பிள்ளையவர்களும், சென்னை அறநிலைய இலாகா திரு. T. H. விவேகானந்தம் பிள்ளை அவர்களும், வித்துவான் திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்களும், தேவகோட்டை சித்தாந்தப் புலவர் மாமணி பாலகவி வயிநாகரம் திரு. வே. இராமனுதன் செட்டியார் அவர் களும், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் சிவநெறிச் செல்வர் வித்துவான் திரு. கே. எம். வேங்கடராமையா அவர்களும், திரு-முறைச் செம்மல் வித்துவான், திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்களும், சென்னை மைலாப்பூர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்தவரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்" பத்திரிகையின் ஆசிரியருமான ஸ்ரீலஸ்ரீ பரமாத்மாநந்த சுவாமிகள் அவர்களும், சென்னை 'திருப்புகழ் அமிர்தம்' ஆசிரியர் குகஸ்ரீ திரு. கிருபானந்தவாரி அவர்களும், தஞ்சை, தமிழ் விரிவுரையாளர் திரு. மது. விமலானந்தம் அவர்களும் சென்னை திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்களும், சென்னை வித்துவான், திருமதி. விஜயசரஸ்வதி அம்மையார், டெல்லி திருமதி. புவனேஸ்வரி அம்மையார் போன்ற மற்றும் பல ஆசிரியர் ஆசிரியைகளும் உதவு

கின்ற சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரைகளும், 'குமரகுருபர'னில் இடம் பெறுகின்றன. மாசித்திங்கள் முதற்கொண்டு 'குமரகுருபரன்' ஒவ்வொரு இதழிலும் Messers. F. Kingsbury, B.A. அவர்களும், G. E. Phillips, B.A. (Lond ) M. A. (Oxon.) அவர்களும், 1921ம் வருடத்தில் வெளியிட்டுள்ள "Hymns of the Tamil Saivite Saints" என்ற புத்தகப் பிரதியில் கண்ட திருமுறைப் பாசுரமும் அதன் ஆங்கில மொழிபெயர்ப்பும் மாதம் ஒரு பாசுரம் வீதம், 'குமரகுருபரனில்' பிரசுரிக்கப்பெறும்.

நூலாய்தல், நூற்பொருளின் நுணுக்கம் காணல், மால் கொண்ட உளத்தவர்தம் மயக்கம் தீர்த்தல் ஆகிய பல்வேறு துறைகளில் புதுப்புதுக் கருத்துக்களை அமைத்து, நுண்மாண் நுழைபுலம் செறிந்த கட்டுரைகளையும், மக்கள் நலனும், தமிழ் ஆர்வமும், சமயப் பற்றும் அடிப்படையாகக் கொண்ட கட்டுரைகளையும், நம் குமரகுருபரனுக்கு தொடர்ந்து உதவி வரும் எல்லா அன்பர்களுக்கும் எம் நன்றி என்றென்றும் உரித்தாகும்.

"குமரகுருபரன்" செவ்வனே வெளிவர உழைக்கும், ஆசிரியக் குழுவினர்க்கும், உரிய காலத்தில் அச்சுப்பணி பூர்த்தி செய்தும் இதழ்களை குறித்த காலத்தில் அனுப்பியும் உதவிவரும் அச்சகப்பணியாளர்களுக்கும், கலைக்கோவில் சிப்பந்திகளுக்கும் நம் நன்றி உரித்து.

திருச்செந்திலாண்டவன் துணை முன்னிற்க.
தமிழும் சைவமும் தழைத்தினி தோங்குக.
குமரகுருபரன் வளர்க.

ஸ்ரீவைகுண்டம்,
14—1—'61.

இங்ஙனம்,
T. M. குமரகுருபரன் பிள்ளை, B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.



# சிதம்பரச் செய்யுட் கோவை

தருமையாதீனம் முதுபெரும் புலவர்,
**மாணிக்கவாசகன்.**
( முத்து. சு. )



[ கட்டுரை. 1 ]

ஆசிரியப்பாவின் இனம்

(தாழிசை துறை விருத்தம்)

1. " சிற்றம் பலத்து நடிக்குஞ் சிவபெருமான்
கற்றைச் சடைக்கு முடிக்குஞ் சுடர்த்திங்கள்
மற்றப் புனன்மங்கை வாணுதலை யொக்குமால்.

2. பேரம் பலத்து நடிக்குஞ் சிவபெருமான்
வார்செஞ் சடைக்கு முடிக்குஞ் சுடர்த்திங்கள்
நீர்மங்கை கொங்கைக்கு நித்திலக்கச் சொக்குமால்.

3. பொன்னம் பலத்து நடிக்குஞ் சிவபெருமான்
மின்னுஞ் சடைக்கு முடிக்குஞ் சுடர்த்திங்கள்
அந்நங்கை செங்கைக் கணிவளையு மொக்குமால்."

மூன்றனுள் முதலாவதில் இரண்டாவது பாடல் இது. இஃது ஒருபொருள் மேல் மூன்று அடுக்கிவந்த ஆசிரியத் தாழிசை. அதை உணர்வதே இதன் பொருளுணர்வதாகி விடும்.

அடுக்கி வந்த மூன்றனுள்ளும் ஒரே பொருள் உள்ளமை தெள்ளிதே ஆயினும், யாப்பியல் முதலிய கல்லாதாரும் உணர்தல் வேண்டி, இப்பாடலை இவ்வாறு காட்டுகின்றேன்.

(அ) சிவபெருமான்

1. சிற்றம்பலத்து நடிக்குஞ் சிவபெருமான்
2. பேரம்பலத்து நடிக்குஞ் சிவபெருமான்
3. பொன்னம்பலத்து நடிக்குஞ் சிவபெருமான்

(ஆ) சடை

1. கற்றைச் சடை
2. வார் செஞ்சடை
3. மின்னுஞ்சடை

(இ) திங்கள்

1.
2. } முடிக்குஞ் சுடர்த்திங்கள்
3.

கங்கை

1. புனல் மங்கை
2. நீர் மங்கை
3. அந் நங்கை

திங்கள் கங்கைக்குத் திகழ் வண்ணம்

1. புனல் மங்கை வாள் நுதலை ஒக்கும்.
2. நீர் மங்கை கொங்கைக்கு நித்திலக்கச்சு (முத்துக் கச்சு) ஒக்கும்.
3. அந் (நீர்) நங்கை செங்கைக்கு அணி (அழகு செய்கின்ற) வளையும் ஒக்கும்.

அடுக்கிய தாழிசை மூன்றனுள்ளும் ஒரே பொருள் உண்மையை நன்குணரலாம். அது சிவபெருமான் சடைக்கு முடிக்கும் திங்கள், அச்சடையில் உள்ள கங்கைக்கு (வாள் நுதலும், நித்திலக்கச்சும், அணிவளையும்) ஒக்கும் என்னும் ஒரு பொருளே. நுதலும் கச்சும் வளையும் வெவ்வேறாயினும் ஒப்பு என்பது ஒன்றேயாகும். திங்களின் ஒப்பே மூன்று தாழிசையிலும் உள்ளதொரு பொருள்.

பிறைக்கு வளை உவமையாதல் பிறநூல்களிலும் கூறப் பட்டிருத்தலை ஐயர் அவர்கள் பதிப்பில் முற்காலத்துக் குறுந் தொகைப் பாடலாலும் பிற்காலத்துப் புராணப் பாடலாலும் விளக்கியிருத்தல் அறியத்தக்கது.

'வளையுடைத்தனையது பிறை' என்று குறுந்தொகை (307) யும் 'புலவியின் உடைந்தசங்கம் (-சங்குவளையல்) புரிசடைத் திங்கட் கீற்றின் விளங்கும்' என்று கூர்ம புராணமும், 'ஊடலின் உடைந்த சங்கம் ஒளிர்சடைப் பிறைவெண்கீற்றின் மாடுறப் பொருத்தும் போழ்து' என்று திருச்செந்தூர்ப் புராண மும் கூறின. இவற்றுள் பின்னதில் 'வெண்பிறைக் கீற்று' எனல் வேண்டுவது 'பிறை வெண்கீற்று' என்றதால் வெண்மை பிறைக்கு இன்றிக்கீற்றிற்கு ஆயிற்று. ஆயினும் 'செவிசெஞ் சேவல்' 'வாய்வன் காக்கை' என்பவை போல், அடைசினை முதல் சினை அடைமுதல் ஆக மாறியமையும் இலக்கணத்தது என்று கொள்ளப்படும். படினும் சேவலும் செவியும் காக்கையும் வாயும் போல் பிறையும் கீற்றும். முதலும் சினையும் ஆகா.

சிற்றம்பலம், பேரம்பலம், பொன்னம்பலம் (கனகசபை) தெய்வசபை, இராசசபை என்று ஐந்து அம்பலம் தில்லை யெல்லையின் இருத்தலை அறிந்து போற்றல் தொல்லைச்சான்றோர் பழக்கம். அது புதிய சான்றோர்க்கு இல்லை; அவர் வேண்டுவது இல்லை; தேவையில்லை என்பார் அவர்.

சிவபிரான் திருமுடியிற் பிறை விளங்குந் தோற்றமும் சிவகாமசுந்தரி திருமுடியில் தலைக்கலன் ('பிறை' என்னும் தலையணி; தலையலங்காரம்) விளங்குந் தோற்றமும் ஒரு கருத்தைத் தோற்றுவிக்கின்றன. அஃது யாது? சிவபிரான் தன் திருமேனியிற் பாதியைச் சிவைக்கு அளித்த பங்கீட்டு வேளையில் தன்முடித் திங்களையும் பங்கு போட்டுப் பாதி கொடுத்த வண்ணம் போலும் அவ்விருவர் திருமுடியிலும் உள்ள பிறைத் தோற்றம்' என்பது அக் கருத்து.

சிவபிரான் திருமுடியில் உள்ளது "பிறை"; சிவையின் திருமுடியில் உள்ளது "பிறை" என்னும் பெயர் பெற்ற தலையணி.

அம்பிகைக்குத் திருமேனியிற் பாதியைச் சிவபிரான் அளித் தருளிய காலம் எது? ஒன்ருயிருந்த கடவுள் உலகுயிர்களை இயக்கும் இயவுள் ஆம் காலம்: ஒரு பொருள் இரண்டான காலம்; சத்தியைத் தன்னுள் அடக்கிக்கரந்திருந்த கடவுள், தன் சத்தியை வெளிப்படுத்திய காலம்.

'பெண்ணுரு ஒரு திறன் ஆகிற்று. அவ்வுருத்தன்னுள் அடக்கிக்கரக்கினும் கரக்கும்' எனப் புறநானூற்றுக் கடவுள் வாழ்த்துள் வரும் அடிகளை இங்கு நோக்குக.

"நாகம் பொதிசடைமேல் நாள்மதியும் வாள்மதிபோல்
நங்கை கங்குல்
மேகம்செய் கூந்தல் மிலைச்சும் தலைக்கலனும்
விளங்கும் தோற்றம்
ஆகம் பகுந்தளித்த அந்நாளில் அம்பலத்தான்
மாகம் பதியும் மதியும் பகுந்தளித்த
வண்ணம் போலும்." (சிதம்பரச் செய்யுட் கோவை. 48)

இப்பாடலில் மூன்ருவதடி இருசீர் குறைந்துளது. அதனுல் துறை யாயிற்று. ஏனை மூன்றடிகளின் அளவே போன்று அவ்வடியும் செவ்வடியாயின் விருத்தம் ஆகும்.

அடுத்த பாடலிலும் இவ்வாறே உளதாயினும் அஃது இரண் டாவதடியையே ஈற்றிருசீரும் இன்றி மடக்கியதால் இதனின் வேருயிற்று.

[குறிப்பு:- நாகம் - அரா. நாள்மதி - பிறை. வாள்மதி போல் மிலைச்சுந்தலைக்கலன், (பிறைபோலும் தலையணி) கங்குலும் மேகமும் செய்த (ஒத்த) கூந்தல். மிலைச்சும் - சூடும். ஆகம் - உடம்பு. பகுந்து - பகிர்ந்து. பகுதல் - தன்வினை. பகுத்தல் - பிறவினை. தன்னையே தான் பகுத்தலால் பகுந்து என்று தன் வினையாற் கூறப்பட்டது. சிவமும் சிவையும் அபேதம், பேதம் கற்பிதம், இங்குப் பகுத்தல் இல்லை, பகுதல் உளது. அளித்தலும் அளிக்கப்பெறுதலும் உபசாரம், உண்மையன்று. மாகம் - வானம். பதியும்மதி - பொருந்தும் பிறை.]

வானேர் அசுரரொடு பாற்கடலைக் கடைந்த காலத்து எழுந்த நஞ்சை சிவபிரான் உண்ணுது விட்டால், என்ன கெடும் என்பதைக் குகைநமசிவாயர் அருளிய பாடல் ஒன்று அறிவிக்கின்றது. அஃதாவது 'வானவரும் இந்திரனும் மாலொடயனும் செத்துப்போன இடம் புல் முளைத்துப் போகாதோ - தானமுதா அத்தர் அருணேசர் அன்பாக நஞ்சுதனைப் புத்தியுடன் உண்ணுத போது', என்பது. அப் பாடலின் கருத்தே இச் சிதம்பரச் செய்யுட் கோவையிலும் வேற்றுருவில் அமைந்துளது.

"மாயிரு ஞாலத்து மன்னுயிர்கள் கண்களிப்ப
மன்று ளாடும்
நாயகன் கண்டம் கறுத்தன்றே பொன்னுலகை
நல்கிற் றம்மா
நாயகன் கண்டம் கருதேல்அந் நாட்டமரர்
சேயிழை மாதருக்குச் செங்கைகளும் கொங்கைகளும்
சிவக்கும் போலும்."

பாற்கடலின் எழுந்த ஆலகாலவிடம் அதைக் கடைந்த அமரரை மாய்த்திருக்கும்; அமரர் வேண்டிக் கொண்டதால் ஆண்டவன் வேண்டி அதை அருந்தானேல். அருந்திய இறைவனது திருக்கழுத்து அந்நஞ்சின் கறுப்பை அடைந்தது.

அது கறுத்ததால் அமரர்க்குப் பொன்னுலக வாழ்வு நிலைத்தது. எமனுலக வாழ்வு நேராதொழிந்தது. அமரலோகத்து மகளிர் செங்கைகளும் கொங்கைகளும் சிவக்காமல் இயல்பான நிலையில் விளங்கின. கண்டம் கறுத்திலதேல் அண்டவாணர் அனைவரும் ஆவிபிரிந்திருப்பர். அவர் மனைவியார் எல்லாரும் செங்கைகளாற் கொங்கைகளை அடித்துக்கொண்டழுது வருந்தியிருப்பார். அதனுல் அச் செங்கையும் சிவக்கும், கொங்கையும் சிவக்கும். செங்கை சிவப்பதில் வியப்பு என்ன? 'செங்கை'யில் உள்ளது இயற்கையான செம்மை. கொங்கையை அடித்ததால் உற்ற சிவப்பு இயல்பாகாது. செயற்கையாகும். கைச்செம்மையும் அடித்துச் சூடுற்ற குருதித்தேக்கத்துச் சிவப்பும் வெவ்வேருகும். கொங்கைச் செம்மையும் அடிக்கப்பட்டு அங்ஙனம் ஆன சிவப்பும் வெவ்வேருகும். சேயிழைமாதருக்கு அச் சேயிழையும்

உறுத்திச் சிவப்பிக்கும். சிவபிரான் திரு நீலகண்டன் ஆகானேல் சேயிழை மாதர் அச் சேயிழையும் போயொழிவர் என்றவாரும். 'சேயிழை' மகளிர் கழுத்தின் மங்கல நாணுகிய செய்ய நூலிழையைக் குறிப்பது. வெண்ணூலிழையும் மஞ்சட்பூச்சால் அதன் செம்மை உறுதல் உளது. இந்நாளிலும் இச் சோழநாட்டுப் பெண்டிர் பல்லோர் செந்நூற்ருலி அணிந்திருத்தலைக் காணலாம். செல்வர் விட்டில் சேயிழை இராது. அவர் வீட்டு வேலைக்காக இருப்பர் வீட்டில் இருக்கின்றது. 'சேயிழை' 'ஆயிழை' 'அணியிழை' எல்லாம் கற்களைப் பதித்துச் செய்த நகைகளையே உணர்த்துவன எனல் எக்காலத்துக்கும் பொருந்தாது. 'இழை' என்பது 'நூலிழை'யைக் குறித்தல் இயற்கை. இழைத்துச் செய்யப்பெற்றதற்கு அப்பெயர் ஆக்கம்.

"பஞ்சிதன் சொல்லே பனுவல் இழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—எஞ்சாத
கையே வாயாகக் கதிரே மதியாக
மையிலா நூன்முடியு மாறு."

என்ற வெண்பாவில், இழையும் சேயிழையும் உணர்த்தும் பொருள் அவ்வுண்மையை விளக்கும்.

(தொடரும்)

## "பொங்கல் வாழ்த்து"



பொங்குக குமர குருபரன் பொங்குக
தமிழகம் முழங்க எங்கும் தங்குக
எவரும் துதிக்க எழிலுடன் விளங்குக
மழையால் வளமுடன் மாநிலம் பொலிய
கதலியும் மஞ்சளும் கரும்பும் செந்நெலும்
இவைஎலாம் ஈந்த இறைவனை ஏத்தும்
வாழிய உலகே மேழியும் பிறவும்
வாழிய நன்றே வாழிய பொங்கலே.

சுபம்.

**D. ஷண்முகம்,**
*தமிழ்ச் சங்க நூல் நிலையம்*
'A.' செம்மங்குடி Po.




திருமுருக குகஸ்ரீ கிருபானந்தவாரியார் அவர்கள்,
ஆசிரியர், "திருப்புகழ் அமிர்தம்" சென்னை.



நாம் அநுபவிக்கும் சுகதுக்கங்கட்குக் காரணம் நாம் முன் செய்த நல்வினை தீவினைகளாகும்.

வயலில் எதனை விதைக்கின்றோமோ அதனை அறுவடை செய்கின்றோம். நன்செய்யில் நெல் விதைத்தால் நெல் விளைந்து வரும். புன்செய்யில் கேழ்வரகு விதைத்தால் கேழ்வரகு விளைந்து வரும்.

புண்ணியம் நன்செய்ப் பயிர்; தீவினை புன்செய்ப் பயிர்.

இப்போது சிலர் ஆலய வழிபாடு செய்வார்கள். ஜப தபங்கள் புரிவார்கள். தானதருமங்கள் செய்வார்கள். அருள் நூல்கள் ஓதுவார்கள். அப்படி நன்னெறியில் நிற்பவர்க்குப் பலவகையான இடர்ப்பாடுகள் வருகின்றன.

கொலை புலை களவு வஞ்சனை சூதுவாது பொய் புனை சுருட்டு முதலிய குற்றங்களையே புரியும் சிலர், பரம சுகமாக வாழ்கின்றார்கள்.

இதற்கு என்ன காரணம்? இப்போது நாம் உண்ணுகின்ற உணவுப் பொருள்கள் யாவும் சென்ற ஆண்டில் விளைந்தவைகள் தாமே? அதுபோல், இப்போது நுகரும் இன்ப துன்பங்களும் முற்பிறப்பில் செய்த வினைப்பயன்களேயாம்.

இன்று நெல் விளைவிக்கின்ற ஒருவன் சோளம் உண்ணுகின்றான். இன்று சோளம் பயிரிடுகின்றவன் உயர்ந்த சீரகச் சம்பா அன்னம் அருந்துகின்றனன்,

இன்று நெற்பயிர் செய்கின்றவன் சென்ற ஆண்டில் சோளம் பயிர் செய்தான். இன்று சோளம் பயிர் செய்கின்றவன் சென்ற ஆண்டில் சிரகச் சம்பா பயிர்செய்தான். ஆகவே அதன தன் பயன்களை இன்று அவர்கள் நுகர்கின்றார்கள். இந்தக் காரண காரியங்களையறியாது மாந்தர் பலர் மதிமயங்கி இறைவன் மீது குறைகூறுவர்.

"கடவுளே! நான் ஒரு குற்றமும் புரியவில்லையே? சதா உன் நாமமே உச்சரிக்கின்றேனே! உன் கோயிலை வலம்வரு கின்றேனே. அப்படி இருந்தும் இத்துயர் எனக்கு வரலாமா? உனக்குக் கண் இல்லையா? அதோ அந்தப் பாவி தெய்வத்தைச் சிந்திக்க வில்லையே? பாவம் என்றால் அவனுக்கு பாற்சோறுகத் தித்திக்கின்றதே; அ வ ன் பரமசுகமாக வாழ்கின்றானே? உண்மைக்கு உயர்வு இல்லையா? தருமத்துக்கு காலம் இல்லையா?" என்று கூறி அங்கலாய்த்துக் கொள்கின்றார்கள்.

குப்பன் சுப்பன் என்ற இருவர். குப்பனுக்கும் சுப்பனுக்கும் விளைநிலம் உண்டு. குப்பன் இந்த ஆண்டு பயிர் செய்யாமலும் விளைநிலத்துக்குப் போகாமலும் வயிறுபுடைக்க உண்கின்றான். திண்ணையில் அமர்ந்து பலகாலிகளுடன் கூடிசீட்டு விளையாடு கின்றான். பல அநியாயம் புரிகின்றான். ஆனால் சுகமாக இட்லி தோசை வடை பாயசத்துடன் உண்ணுகின்றான்.

எதிர் வீட்டில் வாழும் சுப்பன் சதா வயல் வேலை புரி கின்றான். எனினும் அவன் வீட்டில் அடுப்பு புகையவில்லை. பட்டினி, பரிதவிப்பு.

இதைக் கண்டவர்க்கு என்ன தோன்றும்? பயிரிட்டுப்பாடு படுகின்றவன் பட்டினி; சீட்டாடுகின்றவன் சிறந்த போஜனம்.

குப்பன் சென்ற ஆண்டு இரவு பகலாக உழைத்துப் பயிரிட் டான். அதன் பயன் குதிர்குதிராக நெல். பானை நிரம்பப் பருப்பு.

சுப்பன் முந்திய ஆண்டில் பயிர் செய்யாது தூங்கினான். வீட்டில் குதிர் காலி; வெறுஞ்சாக்குப்பை. இப்பொழுது பாடு படாது அரட்டையடிக்கின்ற குப்பன் நல்லுணவு உண்பதற்கு காரணம் முந்திய ஆண்டில் உழைத்த உழைப்பு.

இப்பொழுது பாடுபடுகின்ற சுப்பன் பட்டினி கிடப்பதன் காரணம் முந்திய ஆண்டில் உறங்கியது. இப்பொழுது வீண் பொழுது போக்கும் குப்பன் அடுத்த ஆண்டில் பட்டினி கிடக்கப் போகின்றான். இப்போது பஞ்சுபடாதபாடு பட்டுப் பயிர் செய்கின்ற சுப்பன் அடுத்த ஆண்டில் பரம சுகமாகவாழப் போகின்றான்.

இந்த விளக்கத்தை நன்கு புரிந்து கொண்டால், பல ஐயப் பாடுகள் அகன்றுவிடும். ஆகவே வினை, வினைசெய்தவன்; வினைப்பயன், வினைசெய்தவன்பால் வினையை ஊட்டுகின்றவன் இந்த நான்கும் உண்டு.

"செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பானும்
உய்வான் ஒருவன்என் றுணர்." —திருவருட்பயன்.

பெரிய ஆலமரம் சிறிய புல் நுனிப்பனித் துளியில் தெரிவது போல், மிகப் பெரிய கருத்தை மிகச்சிறிய இக்குறள் வெண் பாவில் உமாபதி சிவம் உரைக்கின்றார்.

"பிறர்க்கின்னா முற்பகல் செய்யில் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்."

"நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்"

என்ற பொதுமறை வாக்கெனப் பொன்னே போல் போற்றி யுணர்க.

மதுரையில் மாசாத்தன் என்பவர் ஒரு குளக்கரையில் ஜெபஞ் செய்துக் கொண்டிருந்தார். அவ்வழியே ஒரு பசு சென்றது. கொலைஞன் அப்பசுவை வெட்டுதற்கு வாளுடன் வந்தான். "ஐயா! பசு ஒன்று வந்ததே? எவ்வழி சென்றது? என்று வினவினான். மாசாத்தனார் பசு சென்ற வழியைத் தமது கரத்தால் காட்டினார். அக்கொலைஞன் அவ்வழி சென்று பசுவைக் கொன்று விட்டான்.

திருப்பரங்குன்றத்தில் ஒரு சிறந்த முருகனடியார். தரும குணம் பொருந்தியவர். உத்தமரான உள்ளம் படைத்தவர். அவர் பேர் பராசலம் என்பது. சதா சடக்கர மந்திரத்தை ஓதுவார். சாதுவான அவருக்குத் திருச்செந்தூர் சென்று செந் திலாண்டவனைத் தரிசிக்க வேண்டும் என்ற அன்பு எழுந்தது.

அப்போது வண்டி வழி முதலிய சாதனங்கள் குறைவு. பல நாள்கள் சிந்தித்தார். இன்றுபோவோம்; நாளை போவோம் என்று நினைத்தார்.

ஒரு நாள் துணிந்து புறப்பட்டார். "முருகா முருகா" என்று உருகா நின்ற உள்ளத்துடன் வழி நடந்தார். பொழுது போன இடத்தில் படுப்பார். வழியில் எங்காவது நல்லோரை நாடிப் பசி தீர்த்துக் கொள்வார். இவ்வாறு கால் கடுக்க நடந்து சென்று ஒரு நாள் மாலை எட்டயபுரத்தை யடைந்தார்.

மாலை முருகனை வழிபட்டார். எங்கோ சென்று பசியாறினார். ஒரு திண்ணையில் அமர்ந்து தியானஞ் செய்து கொண்டிருந்தார். பாதியிரவு. அந்த வீட்டில் உள்ள ஒரு இளம் பெண் சிறுநீர் கழிக்கத் கதவைத் திறந்து வெளியே வந்தாள். திண்ணையில் தியானம் புரியும் பராசலனாரைப் பார்த்தாள். "ஆ, ஆ இவர் எத்துணை அழகாக இருக்கின்றார். இத்தகைய உத்தமனை நான் கண்டதேயில்லை" என்று அவருடைய எழிலில் ஈடுபட்டாள். "சுவாமி! தாங்கள் யார்? எங்கு வந்தீர்? தங்கட்குத் திருமணம் ஆயிற்றோ"? என்று கேட்டாள்.

"அம்மா! நான் யாத்ரீகன். செந்திமாநகரஞ் செல்கின்றேன். செவ்வேளை எவ்வேளையும் நினைப்பவன். எனக்கு உலக வாழ்வில் விருப்பம் இல்லை" என்றார். "ஐயனே! இதுமுதல் நீர்என் கணவர்; நாம் இருவரும் இனிது வாழலாம். இங்கேயேஇரும்."

"தாயே! இத்தீய சொற்களைச் சொல்லாதே. பெண் தருமத்தைக் கொல்லாதே. அதோ வீட்டிற்குள் உறங்கும் உன் கணவனார் உனக்குக் கண்கண்ட தெய்வம். நான் முருக பக்தன். மாதரை மனதிலும் தீண்டாதவன். நீ உன் கணவனுக்குத் துரோகஞ் செய்யாதே. சிறு இன்பத்தைக் கருதிப் பெரு நரகஞ் சேராதே. அறநெறி நில். அருவினையைக் கொல். கற்பு வழியிற் செல். உன் கணவனைத் துயில் உணர்த்துவேன்" என்றார்.

அப் பெண் ஓடி கொடுவாளால் கணவன் தலையை வெட்டினாள். "இனி நீர் தான் கணவன். அச்சமின்றி உள்ளே வந்து என்னுடன் வாழும்" என்றாள்.

பராசலனார் பதறிப்போனார். "அடி பாதகி! கணவனைக் கொன்ற காதகி! உன்னைக் கண்டாலும் பாவம் வருமே. நான்

இத்திண்ணையில் அமர்ந்தது பிழை'' என்று கூறிப் புறப்பட்டார். ''என்னைக் கைநழுவ விடாதீர். உம்மை நம்பி நாயகனையும் கொன்று விட்டேன். நில்லும் என்னைப் புல்லும்'' என்று கூறி அவரைத் தொடர்ந்தாள். அவர் வேகமாக நடந்தார்.

அவள் ஓ என்று கூறினாள். நடுஇரவில் உறங்கிக்கொண்டிருந்த ஊரவர் விழித்து அங்கு கூடினார்கள். ''பெரியோர்களே! இப்பாவி முன்னிரவில் என் வீட்டுத் திண்ணையில் வந்து படுத்தான். இரவு நான் சிறுநீர் கழிக்க வெளிப்பட்டபோது என் கையைத் தொட்டுக் கற்பழிக்க முயன்றான். என் கணவனுரை அழைத்தேன். அந்தோ! இவன் ஓடி வடிவாளால் என் கொழுநனைக் கொன்றுவிட்டு இதோ என்னை மாசுபடுத்துகின்றான்'' என்று கூறி அழுதாள். ஊரவர் பராசலனாரை நையப் புடைத்தார்கள். ஒரு அறையில் அடைத்து வைத்தார்கள்.

பொழுது புலர்ந்தபின் அந் நகரையாளும் மன்னனிடம் கொண்டு போய் விட்டார்கள். மன்னர் முன் அக்கொடியவள் முன் கூறியதுபோல் கூறினாள். பராசலனார் '' முருகா முருகா '' என்று கூறியவண்ணம் நின்றார். வேந்தன் அவருடைய இரு கரங்களையுந் துணித்து விட்டனன்.

கரம் இழந்த அவர் கண் கலுழ்ந்து கொண்டு, எங்கும் தங்காமல், எங்குந் தங்கிய இளம்பூரணனை ஏத்திக்கொண்டு, பிறவிப் பெருங்கடலுள் வீழ்ந்த ஆன்மாக்கள் முத்திக்கரையேறுகின்ற துறைமுகமாகிய திருச்செந்தூரைச் சேர்ந்தார். எல்லையில்லாத மகிழ்ச்சி எய்தினார். ஆடினார்; பாடினார்; பரவசமானார். நாழிக்கிணற்றிலும் வதனாரம்பக் கடலினும் முழுகினார். அன்பு வெள்ளத்திலும் முழுகினார். கண்ணீர் அருவியிலும் முழுகினார். நேரே சந்நிதியை யடைந்தார்.

''செந்தில் மேவிய கந்தநாதா !
கருணைக்கடலே ! அப்பனே !
அருட்கொண்டலே ! உன்னைக்
காண எத்தனைநாள் ஆசைப்பட்டேன்.''

இன்று உன் இன்முகம் பார்த்தேன். ஆ! ஆ! என்ன ஆனந்தம். கருணை மேகமே! கருணை வாரியே! கருணை மேருவே! என்னையனே! உன்னை நேரில் கண்டும், கைகூப்பி வணங்கக்

கொடுத்து வைத்தேனில்லை. என் கரத்தை யிழந்தேன். அருட் பெருஞ் சோதியே! அப்பாதகி பழிமுட்டி என்னைத் தண்டிக்கச் செய்தாளே. அசரீரியாகவாவது என்னைக் குற்றமற்றவன் என்று கூறக்கூடாதா? ஆண்டவனே! உன் திருஉள்ளம் அறிய ஒரு பாவமும் பண்ணவில்லையே! பலரும் என்னை நிந்தித் தார்களே! அடித்து நொறுக்கினார்களே! கருணைத் தெய்வ மாகிய நீ பார்த்துக் கொண்டிருந்தனையே? இது நியாயமா? உன் கருணைக்கு அழகா? இது முறையா? இது தருமந்தானோ? என்று முறையிட்டு அழுதார்; தொழுதார். துள்ளினார். துடித் தார். அவருடைய அளவற்ற அன்பினைக்கண்ட, ஆண்டவன் அருள்மொழி புகல்வாராயினர்.

"அன்பனே! வருந்தற்க. அவரவர் முற்பிறப்பில் செய்த வினைப்பயனை அவரவர் நுகர்ந்தே தீரவேண்டும்.

நீ முற்பிறப்பில் மதுரை மாசாத்தன். குளக்கரையில் ஜெபஞ் செய்து கொண்டிருந்தாய். அவ்வழியே பசு ஒன்று சென்றது. கொடிய கொலைஞன் வாளுடன் பசுவைத் தேடிவந்து, பசு எவ்வழி யேகியது என்று உன்னை வினவினான். நீ கரங்களால் பசு சென்ற வழியைக் காட்டினாய். அவ்வழி சென்று பசுவை வெட்டி விட்டான். அந்தப் பசு பெண்ணாகப் பிறந்தது. கொலை செய்த கொடியவன் அவளுடைய கொழுநனாகப் பிறந்தான். பசுக் கொலைக்குக் காரணமாகிய உன்னை, கொலையுண்ட பசுவாகிய பெண் பழிமுட்டிக் கையிழக்கச் செய்தாள். முற்பிறப்பில் தன்னைக் கொன்ற கொலைஞனாகிய கணவனை அவள் கொன்றாள்.

இவையெல்லாம் முன்னே நிகழ்ந்த நிகழ்ச்சி. அப்போது வினைக்கேற்ப நியாயத்திர்ப்பு கூறப்பட்டது. அந்த பொய்த் திர்ப்பின்படி இது நிகழ்ந்தது. இப்பிறப்பில் நீ தூயவன். ஆனால் முன் செய்த வினைமுண்டு விளைந்தது. தன்வினை தன்னைச் சுடும். வினை அனுபவித்தாலன்றி ஒழியாது. ஆதலால் வருந்தற்க — நமது பரிபூரண அருள் உனக்குத் துணைபுரியும் என்றார்.

இதனைக் கேட்ட பராசலனார் வியப்பும் அச்சமும் எய்தி இறைவன் திருவடி மலர்மீது வீழ்ந்து எழுந்தார். கரம் வளர்ந்தது. முருகா! முருகா!! என்று கூறித்துதி செய்தார்.

---




பேராசிரியர்,

**திரு. கோ. சுப்பிரமணியம் அவர்கள் எம். ஏ., பி. எல்.,**

இறைவனின் இனிய சின்னம் சிரிப்பு. அது மனிதனின் தனிச் சொத்து; பிறவியின் பேரொளி; வாழ்க்கையின் வெற்றிக் கொடி; கவலையின் பகைவன்; துன்பத்தின் துணைவன்; இன்பத்தின் இளங்குருத்து; இடுக்கணைக்களையும் எஃகு; செம்மையின் கூட்டாளி; தீமையின் எதிரி; நோயினை நொடிக்கும் நோன்படை; மகிழ்ச்சியின் கான்முளை; உயிரை வளர்க்கும் செவிலி; உடலை வளர்க்கும் உணவு; திருமகள் இருப்பிடம்; செயமகள் பிறப்பிடம்; முதுமகள் முடிவிடம்; உறவின் ஊற்றம்; நட்பின் ஏற்றம்; பொற்பின் பொலிவு. இந்த நன்னயம் வாய்ந்த நலமிகு சிரிப்பு, இன்னார் இனியார் என்றில்லாமல் மனிதக்குலம் அனைத்திற்கும் வரிகொடுக்க வேண்டாத, பறிகொடுக்க முடியாத தவிரா உடைமை. இதனை ஒவ்வொருவரும் நலந்தீங்கிலும், இடரினும் தளரினும் மறவாது போற்றிக் காத்தல் வேண்டும். கோடி பொன்னைக் கொட்டினாலும், ஒருவன் அதற்காகத் தன் சிரிப்பை இழந்துவிடக் கூடாது.

சிரிக்கும் ஆற்றல் ஏனை உயிரினங்களுக்குக் கிடையாது. மனிதன் ஒருவனால்தான் சிரிக்கமுடியும். ஆகவே, சிரிப்பு மனிதனுடைய ஏற்றத்தை எடுத்துக் காட்டுகிறது. அதனால் அவன் ஏனை உயிரினங்களிலும் மேம்பட்டு விளங்குகிறான். கவலைக்குக் கைகண்ட மருந்து சிரிப்புத்தான். 'இடுக்கண் வருங்கால் நகுக' என்பது பொய்யாமொழி. நமது சிரிப்பைப் பிடுங்கிச் செல்வதற்காகவே கவலைகள் எழுகின்றன. நாம் ஏமாந்துவிடக் கூடாது. எந்த நிலையிலும் நாம் சிரிப்பைக் கைவிடலாகாது. குலுங்கச் சிரித்தால் அழுங்கல் இல்லை. நன்றாகச் சிரிக்கும்

பொழுது வயிற்றுக்கும் மார்புக்கும் இடையிலுள்ள தசைப் பற்றுக்கள் நன்கு அசைந்து கொடுக்கின்றன. மார்பின் இடம் விரிகின்றது. கூடுதலாக நல்ல காற்று உள்ளே செல்கின்றது. அதனுல் வேண்டும் பிராணவாயு நுரையீரலுள் நுழைந்து இரத் தத்தைத் தூய்மை செய்கின்றது. உடல் நலம் செழிக்கின்றது. உள்ளத்து உவகை பெருகுகின்றது. அதற்காக, எப்பொழுதும் சிரித்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதில்லை. அப்படிச் செய்வது பைத்தியக்காரத்தனம். காரணத்தோடு சிரிக்க வேண்டும். காரணம் உள்வழிச் சிரிக்காமல் இருப்பது உடம்பில் ஏதோ கோளாறு உளது என்பதையே எடுத்துக் காட்டும். சிலர் ஒலிபடச் சிரிப்பது பண்பாடு அன்று என்று தவருக நினைத்துக் கொண்டு வந்த சிரிப்பையும் அடக்கி விடுவார்கள்.

சிரிப்பை அடக்கவேண்டிய இடங்கள் உண்டு. "செவிச் சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தொழுகல், ஆன்ற பெரியா ரகத்து" என்று வள்ளுவர் கூறியுள்ளார். பெரியவர்கள் கூட் டத்தில் இருக்கும்பொழுது ஒருவருக்கொருவர் இரகசியம் பேசு வதும் கூடிச் சிரிப்பதும் கூடாது. மற்றும், பிறரை ஏளனம் செய்து மனதைப் புண்படுத்தும் விதத்தில் சிரிக்கக்கூடாது. "நகையுள்ளும் இன்னுது இகழ்ச்சி பகையுள்ளும், பண்புள பாடறிவார் மாட்டு." என்பது திருக்குறள். பரிகாசச் சிரிப்பு மிகப் பொல்லாதது. பாண்டவர்கள் புதிதாகக் கட்டிய அரண் மனையில் துரியோதனன் வழிதெரியாமல் திகைத்துப் பளிங்குக் கதவில் முட்டி விழுந்தபொழுதும், வெறுந் தரையைத் தாமரைப் பொய்கை என்று ஆடையை ஒதுக்கிக்கொண்டு நடந்தபொழு தும், கேலிசெய்து சிரித்தாள் பாஞ்சாலி. அவள் சிரிப்பே அவ ளுக்குப் பல அல்லலையும் தந்து, பாரதப் போருக்கும் காரண மாயிற்று:-

"பொன்னைச் சிரிக்கும் பூங்கோயில் புனல்வாவியில் என்றெங்கள்குல
மன்னைச்சிரித்த செங்கனிவாய் மாருதிரங்கி யழுதரற்ற
மின்னைச் சிரிக்கு நுண்ணிடையாய் வேந்தர்க்கெதிருன்மெய்க்கணவன்
தன்னைச் சிரிக்க விருக்கின்ற சழ நீ காணிற்றரியாயே."

என்று துச்சாதனன் திரௌபதியைக் குத்திப் பேசுவதைக் காணலாம். பொதுவாகப் பெண்கள் அதிகம் சிரித்தல் கூடாது.

ஆனுல் எப்பொழுதும் புன்னகை தவழும் முகத்துடன் இருக்கப் பழகுதல் வேண்டும்.

பழக்கத்தால் வருவது சிரிப்பு. சிரிப்புடன் திகழப் பழகுதல் வேண்டும். அது இயல்பாய் அமைவது மிகவும் நல்லது. பிறக்கும் பொழுது குழந்தை முதலில் அழத்தான் செய்கிறது. ஆனுல் அதை நாம் சிரிக்க வைக்கிருேம். அதன் விலாவில் விரலால் நெருடிக் கீச்சம் காட்டிச் சிரிக்க வைக்கிருேம். கீச்சுக் கீச்சுக்கீச்சு என்றதும் அது களுக் களுக் களுக்கென்று சிரிப்பை உதிர்க்கிறது. ஆ ! ஆ !! குழந்தை பொக்கைவாயைத் திறந்து உதடு நெளியக் கன்னங்குழியக் குலுங்கிச் சிரிக்கிறது. அது ஓர் அழகுக் காட்சி ! சுவர்க்கத்தையே திறந்து விட்டது போல் இன்பம் மேலிடுகிறது. நாமும் சிரித்து மகிழ்கிருேம். இவ்வாறு பிறரைச் சிரிக்க வைத்து நாமும் சிரிக்கப் பழகுதல் வேண்டும்.

சிரிப்பு என்பது மனித ஆயுளின் விரிப்பு. அதுவே நம் குறிப்பு. இவ்வுலக வாழ்க்கையை ஏதோ ஒரு தாங்கற்கரிய துயரமாகக் கருதி, முக்கி முனங்கி முணுமுணுத்து, அக்காள் பிடித்து அழுது அழுங்கிச் சாகக் கூடாது. வாழ்க்கையைக் களிப்பும் சிரிப்பும் விளேயாட்டுமாக எளிதில் இனிதாகக் கழித்துச் செல்லுதல் வேண்டும். நமது கடவுளே ஒரு விளேயாட்டுப் பிள்ளேதான். அவர் அருட்செயல்களேத் திருவிளேயாடல் என்றே நாம் குறிக்கின்ருேம். அவர் செய்வனவற்றை எளிதிற் செய்யினும் விளேயாட்டாகவும் செய்கிருர் என்று கூறுவதில் தவறில்லே. “ காத்தும் படைத்தும் கரந்தும் விளேயாடி ” என்பது மணிவாசகம். இவ்வாறு திருவிளேயாடல் புரியும் சிவபெருமான் ஒரு சிரிப்புக் கடவுள். அவன் ஆடற் கடவுள் அல்லவா ? ஒரே துக்கமும் துயரமும் குடிகொண்டிருந்தால் அம்பலத்தில் ஏறி ஆட முடியுமா ? சாம கீதங்கள் பாட முடியுமா ? ஆடுவதற்கும் பாடுவதற்கும் சிரிப்பும் கொந்தளிப்பும் சீராக அமைய வேண்டும் அல்லவா ? அவன் ஆடும்பொழுது குமிண்சிரிப்பும் கூடவே குலாவி நிற்கிறது. அவன் அம்பலத்தில் ஆடும்பொழுது அவன் அருள் முகத்தில் புன்சிரிப்புத் தாண்டவம் புரிகின்றது. அப்பர் பாடுகிருர் பாருங்கள் :—

"குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்தசடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்த பொற்பாதமுங் காணப்பெற்ருல்
மனித்தப்பிறவியும் வேண்டுவதேயிந்த மாநிலத்தே."

சிவ பெருமான் ஆடும்பொழுதுதான் சிரிப்பு என்பதன்று. அவன் பகைவர்களைச் சாடும் பொழுதும் சிரிப்புத்தான். முப்புரங் களையும் அவன் சிரித்தே எரித்தான். அவனுடைய சிரிக்கும் முகத்தைக் கண்கொண்டு பார்த்துவிட்டால் வேறு பார்ப்பதற்கு என்ன இருக்கிறது? அத்தகைய கோலக்காட்சி கண்கொள்ளாக் காட்சி! தில்லைக் கூத்தனின் சிரித்த முகத்தைப் பொருத்தமாய் விரித்துக் கருத்திற் பரவிக்களித்துப் பாடுகிருர் அப்பரடிகள்:

"தெரித்த கணையால் திரிபுர மூன்றுஞ் செந்தீயின் மூழ்க
எரித்த இறைவன் இமையவர் கோமான் இணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்றதில்லைச் சிற்றம்பலவன்
சிரித்த முகங்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே."

சிவனுடைய விளையாட்டுகள் அளவற்றன. நாமும் விளை யாடுகிருேம். யாராவது எதற்காவது பயப்படுவார்களானுல், அதனை அவர்களுக்குக் காட்டி அவர்கள் பயப்படக் கண்டு நாம் சிரிப்போம். சிலருக்குத் தேள் என்ருல் அதிக பயமாக இருக்கும். செத்ததேளைக் கண்டால்கூட ஒவென்று கத்து வார்கள். அது நமக்கு விளையாட்டாக இருக்கும். எங்காவது தேளை அடித்தால் அதை அவர்கள் முன்னுல் தூக்கிச் சென்று பயம் காட்டி நாம் சிரிப்போம். அல்லது தலையில் முக்காடு போட்டுக் கொண்டு பூச்சாண்டி என்று குழந்தைகளைப் பயம் காட்டிச் சிரிப்போம். அது ஒரு பெரிய கேலிக்கூத்தாக இருக்-கும். அதுபோல் சிவபெருமானும் உமையம்மையிடம் கேலிகள் செய்வார். ஓர் அமயம் தாருகாவனத்து முனிவர்கள் ஏவிய யானை ஒன்று சிவன்மேல் பாய்ந்து வந்தது. அதைச் சிவபெரு மான் கொன்று அதன் தோலையுரித்துப் போர்வையாகப் போர்த் துக்கொண்டார். அதுகண்டு உமையம்மை நடு நடுங்கிப் போனுர். தேவியின் பயம் சிவனுக்குச் சிரிப்பை மூட்டியது. மேலும் விளையாடக் கருதி, ஒரு பயிரவ வேடத்தைப் போட்டுக்

கொண்டு, கையிலே ஒளிவிடும் படியான திரிசூலப்படையைத் தாங்கி, உடுக்கையை டமடம வென்று அடித்துக் கொண்டு, யானைத்தோலால் தம்மை மூடிக்கொண்டு பூச்சாண்டி காட்டினாராம். உமாதேவியார் கோவென்று கதறிவிட்டார். அதைக் கண்டு சிவபெருமான் சிரித்தாராம்; எவ்வளவு விளையாட்டு நிரம்பிய கடவுள் நம்முடைய இறைவன் பாருங்கள் :—

"விரித்தபல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமருகங்கை
தரித்ததோர் கோலகால பயிரவனாகி வேழம்
உரித்துமை யஞ்சக் கண்டு ஒண்திருமணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே."

இறைவன் தமது ஒள்ளிய அழகிய இரத்தினம் போற்சிவந்த வாயைத் திறந்து கடகட வென்று சிரித்தருளினாராம்.

ஆனால் அவர்வெறும் விளையாட்டுப் பிள்ளை என்று நினைத்து விடக்கூடாது. வேதங்களையெல்லாம் அவருடைய ஒண் திருமணிவாய் ஓதிக் கொண்டேயிருக்கும். அவர் அதிகம் படித்தவர். சிவபெருமானின் அம்மையப்பர் திருவடிவத்திலே இடப்பாதி அம்மையின் திருவுருவம். வலப்பாதி அப்பனின் வடிவம். வலப்பக்கத்து அப்பனின்வாய் வேதகீதம் பாடுவதைக் கண்டு, தம் கணவர் இவ்வளவு கல்வி கற்றிருக்கிறாரே என்று பெருமை கொண்டு உமாதேவியார் புன்முறுவல்பூத்து மகிழ்வாராம். அதை, 'மெல்ல நகுமால்' என்று அப்பரடிகள் குறித்துப்பாடுகிறார் ;—

"புதுவிரி பொன்செ யோலை யொருகாதொர்காது
சுரிசங்க நின்று புரள
விதிவிதி வேதகீதமொருபாடு மோத
வொருபாடு மெல்ல நகுமால்
மதுவிரி கொன்றை துன்றுசடைபாக
மாதர் குழல்பாகமாக வருவர்
இதுஇவர் வண்ண வண்ணம் இவள் வண்ண வண்ணம்
எழில்வண்ண வண்ணம் இயல்பே."

பிறரை ஏமாற்றிப் பிழைக்கின்ற வஞ்சர்கள், கரவாடும் வன்னெஞ்சர்கள் போலிப்பத்தர்களாகவும் மாறுவார்கள்,

உலகின் கண்ணிலே மண்ணைத் தூவுவதற்காகச் சிவபூசை செய்வதுபோல் மலரைத் தூவுவார்கள், நீரைக் கொட்டுவார்கள். இறைவன் அவர்களைக் கண்டு நாணுகிறான். உலகையெல்லாம் ஏமாற்றினது போதாதென்று தன்னையும் ஏமாற்றவரும் இத்தறுகண்ணர்களைக் கண்டு சிவன் சிரிக்கிறான் :-

"நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
போக்க மிக்கவன் பூவுநீருங் கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே."

(வளரும்)

---

# நமது மாதரின் வருங்கால வாழ்வுமுறை

சுவாமி பரமாத்மாநந்தா அவர்கள்,
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மைலாப்பூர் – சென்னை.

[மலர் 11. 1960 - தை மாத இதழின் 24-ம் பக்கத் தொடர்ச்சி]

கற்பு நெறி என்பது யாது? இல்லக்கிழத்தி கொழுநனை மனிதனாக எண்ணி அன்பு செய்வது மட்டுமன்று; அதனினும் சால்புமிக்கது, கொழுநனைத் தன் தெய்வமாகத் தொழுது, அவனுக்குச் செய்யும் பணியை இறை பணியாக எண்ணி இயற்றலேயாம். எல்லாம் சிவமயம் எனக் காண்பது உயர்வற உயர்ந்த இந்துமதக் குறிக்கோளன்றோ? இக்குறிக்கோளின் ஒரு பகுதியே கற்பு நெறியாற் கடைப்பிடிக்கப்படுவது. கற்பு நெறியின் அறுதிப் பயனாவது ஞானவாழ்வே, இறைபணி நிற்றலே. மனைவி தன் கணவனை இடையறாது இறைவனாகவே பாவனை செய்து, இறுதியில் அவ்வாறே ஞானக்கண்ணால் உணர்தலை நாடிநிற்கிறாள். தன் கொழுநனுக்கும், அவனது குடும்பத்தார்க்கும் அன்றாடம் இயற்றிவரும் அன்புச் செயல்கள் அத்தனையும் அவட்கு வேதகருமம் போன்று புனிதம் வாய்ந்தன. அவளது வாழ்வு தொடர்ந்தோடும் வழிபாட்டு வெள்ளமேயாகும். இக்காரணம் பற்றியே, கணவன் துஞ்சிய பின்னர் அவனது உருவப்படத்தைப் பீடத்தில் அமர்த்தி மனைவி வழிபடுவதில்லை. கணவன் உயிரொடு வாழுங்கால் அவன் வாயிலாக இயற்றிய உலவாப் பரம்பொருளாம் இறைவனின் வழிபாடு, அவனை இழந்தபின், நேராக இயற்றப்படுவதாகிறது. கலப்பற்ற ஞான வாழ்விலும், சிந்தனையிலும், தியானத்திலும், இறைவழிபாட்டிலும் அவள் ஈடுபடுகிறாள். ஆதலால் மனைவியின் வாழ்க்கைக்கும் கைம்பெண்ணின் வாழ்க்கைக்கும் இடையே பிளவு உண்டாவதில்லை. கொழுநனைத் தெய்வமாக வழிபட்ட நங்கை கைம்மை நிலையில் தெய்வத்தைக் கொழுநனாகக் கருதி வாழ்கிறாள். ஆதலால் கற்பு நெறி மெய்யுணர்வு பெறுதற்குரிய நெறிகளில் ஒன்றாகவே அமைகின்றது, ஆதலால் அவ்வொரு நெறியையே அனைவரும் பின்பற்றுதல் இன்றியமையாததன்று.

ஏனையமாதர் ஏனைய மெய்யுணர்வு நெறிகளில் ஒன்றைப் பின் பற்றுதல் முறைமையேயன்றி வேறில்லை. அன்றியும், அறிவு பெறும் வாழ்க்கையில் விழிப்புறலும், தொழில் முறை. வாழ்வின் மெய்ம்மையும் உணர்ச்சி ததும்பிய கற்புநெறிக் குறிக்கோளை மங்கச் செய்தலும் இயல்பே. இது எவ்வாறு நிகழும் என்பதையும் ஆய்வோம். கற்பு நெறியின் உயிர்நிலையாவது அன்புப் பயிற்சியே. கற்புடைய மனைவி தன் கணவனின் மதிப்பை ஆராய்வதில்லை. பிறரது கண்ணிற்கு அவன் மதிப்பற்ற மனிதனுகலாம். ஆனுல் கற்புடைய நங்கை அவ னிடத்து உறையும் ஆழ்ந்த மெய்ம்மையாகிய ஆன்மாவையும் இறைவனையும் காண்பதால், வெளித்தோற்றத்தை வென்று விடுகிருள். அம்மெய்ப்பொருள் யாண்டும் தூயதாய், அளவு படாததாய், நித்தியமாய், எல்லாம் வல்லதாய் இருத்தலால் கண்ணைப் பறிக்கும் ஒளிவீசும் அக்காட்சியின் முன்னர், அவ னது புறத்தோற்றமாயுள்ள வரையறைகளைப் பற்றிய உணர்ச்சி தேய்ந்து மாய்ந்து விடுகிறது. இக்காட்சி எல்லா இந்து மனைவி யர்க்கும் வாய்ப்பதில்லை என்பது உண்மையாகலாம்; எனினும் அம்மெய்ப்பொருட் காட்சியை எய்தும் முயற்சி எப்போதும் உள்ளது என்பதை மறுக்கவொண்ணுது. ஆனுலும் அறிவு தன் இயல்பானே அன்பின் வழிக்கு இணங்காது போரிடும் தன்மைய தாம். அது கேள்விகளைக் கிளப்பி ஐயத்தைத் தோற்றுவிக்கும். நெஞ்சத்து உதிக்கும் அந்தரங்க அவாக்களை, புறப்பொருள் களோடு கொள்ளும் மிகவிரிவான தொடர்புகட்குள்ளே இழுத்து விழ்த்தும். அகவுலகையும் புறஉலகையும் ஒன்ருக இணைத்து ஒழுங்குபடுத்தலை அது நாடும். அன்புணர்ச்சி நெஞ்சிலே ததும்பிவழியும்போது புறத்தோற்றம் அப்பெருக்கில் அமிழ்ந்து விடுகிறது. நம் மாதர் அறிவுத்திறனை நாடுங்கால், அறிவுக் கும் அன்பிற்கும் உள்ள இப்போராட்டம் அவரது கற்பு நெறி உணர்ச்சியினைத் தகைந்து, ஓரளவிற்கு அதனைச் சிதைத்தல் ஒருதலை. கணவர்கள் தெய்வங்களாக வணங்கப்படா தொழிவர். கணவர்களின் குற்றங் குறைகளை மனைவியர் நுட்பமாக ஆராய வும், அவற்றைப் போக்க மிகக் கடுமையான முறைகளைக் கையாளவும் தலைப்படுவர். மனைவியரின் அறிவாற்றற்குரிய குறிக்கோள்கட்குப் பொருத்தமான வகையிலே கணவர்கள்

தமது இயல்பைத் திருத்தி அமைத்துக் கொள்ளும் கட்டாயம் நேர்ந்தே தீரும். இவ்வண்ணமே தொழில் முறையில் தேர்ச்சி பெறுங்கால் மாதர் அன்பு நெறியினைப் புறக்கணிப்பவராவார்.

முற்கூறிய அனைத்தும் தடுக்க அறிவிற்கு ஒத்த முடிபுக ளாயினும், வருங்கால வாழ்வினில் அத்தகைய விளைவுகள் தோன்று தொழிதலும் கூடும் என்பதையும் ஒப்புக் கொள்ளல் வேண்டும். மாதர்பால் எத்துணை அறிவுப் பயிற்சியும் தொழிலில் தேர்ச்சியும் தலையெடுத்தாலும், மாதர் பண்டுபோல் முறுகிய அன்புணர்ச்சியின் பெருக்கத்தையும் வணக்க நிலையையும் கை விடாது போற்றிவரும் பெற்றியராதலும் ஒல்லும். மேற்றிசை யில் எழுந்த மாதரியக்கத்தின் தற்காலப் போக்குகளைக் கூர்ந்து நோக்குவார்க்கு இது நன்கு புலனாகின்றது. மாதர்க்கு எப் போதும் விருப்பமானவை, ஒருவீடும் குடும்பமும், தமது அன்புப் பசியைத் தீர்க்கும் ஒருதுறையும் என்ற கூற்றும் பொருத்தமே யாம். மாதர் இயக்கத்தின் இருகுறிக்கோள்களைக் கூறப் புகுந்த அம்மையார், எல்லன்கீ என்பார், அவற்றைப் பற்றி இவ்வாறு கூறுகிறார். "பழைய திட்டப்படி ஆடவர்க்கு முழுச் சமமாதல் மகளிர்க்கு வேண்டும். வருங்கால நாட்டில் இரு பாலார்க்கும் தொழிலியற்றும் கடமை ஒருபடித்தாயிருக்கும். தொழிற் பாதுகாப்பும் சமமாக அமையும், குழந்தைகள் அரசிய லாரின் நிலையங்களில் வளர்க்கப்படுவர். மாதரியக்கத்தின் இன்னொரு குறிக்கோளாவது; கணவன் மனைவியையும், அன்னை குழந்தைகளையும், இவ்வாயிலாக அனைவரும் இல்லத்தையும் மீண்டும் பெறல் வேண்டும் என்பதே."

கற்பு நெறியைப்பற்றி இதுகாறும் உரைத்ததினின்றும், கலப்பற்ற தூயஅன்பு வடிவாய் அது அமைதலைக் கருதுங்கால், கணவரது ஒழுக்கத்தை அது திருத்தியமைக்கவல்லதே என்ற உண்மையை யாம் மறந்ததாக முடிபுகட்டுதலும் தகாது. மன மார்ந்த முழுஅன்போடு ஒரு பெண் கணவனைத் தெய்வமாக வழி படும்போது அதற்கு ஈடாக அவனது மனதை மாற்றும் வலிமை யார்ந்த சக்தி பிறிதொன்றில்லை என்பதும் தேற்றமேயாம். காதலியின் கருத்திற்கு இயையவே, அவள் காதலனை எவ்வாறு இருக்க வேண்டுமென விரும்புகிறாளோ அதற்கு இயையவே,

அவனது உள்ளமும் பெரும்பாலும் தானுக மாற்றமடைகிறது. அன்பு தான் தொட்டதைப் பொன்னுக மாற்றுந்திறன் பெற்ற பரிசவேதியே யாகும். கற்புக் கடம்பூண்ட பொற்புடை மங்கையர் நெறிதிறம்பிய தம் கணவரை நல்லாற்றுப்படுத்தி உய்வித்ததற்குச் சான்றுகள் இந்துமக்கட்குள்ளே எண்ணிறந் தன. சிலசமயம் மாதரே உண்மைக்கு மாருன முறைபிறழ்ந் தனவாய கருத்துகள் சிலவற்றை அம்பலமேறி வெளியிட்டும் ஆராய்ந்தும் வருதலானே, முற்கூறியவாறு கற்பு நெறியின் மேம்பாட்டை அறிவுறுத்துதலும் அவசியமாகின்றது. கண வரைத் தெய்வமெனத் தொழுதலாய சிறந்த கற்புநெறி மாதரை ஆடவர் தமக்கு அடிமையாக்கும் அவாவினுல் அவர்கள்மீது வலிந்து சுமத்திய தளையே யாமெனக் கருதுவார்போல அப் பிரசங்கமேடை மாதர் தோன்றுகின்றனர். ஓர் உயர்ந்த குறிக் கோளைத் தவருன வழியிற் பயன்படுத்தும் சுயநலமலிந்த ஆடவர் சிலர் இருப்பதைக் கொண்டு, குறிக்கோளை இழித் துரைத்தல் முறையன்று. நல்லியல் மனைவியரை நையப்புடைக் கும் விலங்கனைய கணவர்கள் உளரெனினும் அவர்கள் கற்புக் குறிக்கோளின் மாற்றினை அறிய உதவும் உரைகல்லாதற்கு உரியாரல்லர்; கற்பு நெறிக்கு இழுக்கு இறையும் நேராத வண்ணம் அம்மெல்லியலார், "கண்டார் இகழ்வனவே" காதலர் தாம் செய்திடினும் அனைத்தையும் பொறுத்துத் தம் கொண் டார்க்கு நன்னயமே செய்து மகிழும் குலமகளிராகின்றனர். இத்தகைய முறை கேடுகள் காணக்கிடக்கினும், "குணநாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகை நாடி மிக்க கொளல்" என்னும் விதியை யாம் பின்பற்றுவோமாயின், கற்புநெறி உலகிலே வேறெந்த இல்லறக் குறிக்கோளினும் குறைந்த நன்மையைத் தந்தது எனக் கூறவொண்ணுது. அறுதிப்பயன் நலமிக்கதாயின், சிறிது பொறுமையைக் கைக்கொள்ளுவதால் வரும் கேடு யாது? மனைவி தனக்குப் பெருமையை ஊட்டிக் கொள்ளும் பொருட்டு, வெல்லற்காகத் தலைவணங்கலாம் அன்ருே? இல்லற வாழ்விலே இன்பமும் வெற்றியும் பிறங்க வேண்டின், இருவரில் ஒருவர் பொறுமையை அணிகலனுகக் கொண்டே தீரவேண்டும். மேற்றிசையறிஞர் ஒருவர் ஓர்ந்து உரைத்தவாறே, குதிரை மீது இருவர் ஏறுங்கால், ஒருவர்

முன்னே அமர்தல் இன்றியமையாததன்றே? அன்றியும், கணவரைத் தெய்வமெனப் பாவித்து வழிபடும் மாதர் உண்மையாகத் தெய்வத்தை வழிபடுபவரேயன்றிக் கணவராகிய மனிதரை வழிபடுபவரல்லர். கணவர் கோயிலில் உள்ள பிரதிமைகளைப் போன்றே அமைகின்றனர். கணவர் தாம் தெய்வமாகாத நிலையினை உணரும் போது, நாணம் அவரது நெஞ்சில் உறுத்தவே செய்யும். கற்பு நெறியால் மாதர் தெய்வத்திற்கு அடிமையாவதன்றி ஆடவர்க்கு அடிமையாவது யாங்ஙனம்? இவ்வாறு கற்பின் இயல்பை அறியாது குறை கூறுவார் ஒருபுறம் இருக்க, மற்றொரு சாரார் அதற்குப் பதிலாக மிக இழிவானதும் உரனைக்கெடுப்பதும் ஆனஅற்ப ஆடம்பர வாழ்வை நிலைநாட்டக் கருதிக் கற்பு நெறியைக் கண்டிக்கின்றனர். இதுவும் பேதைமையாம். இருப்பதை அழிப்பதற்கு உரிமையை விழையின், அதே யளவிற்கேனும் ஆக்கத் தொழிலிலும் ஈடுபடல் வேண்டும். பரதமா நாட்டிற்கு ஒரே பாதுகாப்பாய் அமைவது, வாழ்க்கையின் அறுதிப்பயனைத் திறவோரது காட்சியில் தெளிந்துள்ளமையின் அதிலுள்ள நம்பிக்கை மக்கட்கு மாற்ற வொண்ணாததாதலே. ஆதலின், ஸமூகவாழ்க்கையில் நேரும் மாறுபாடுகள் அனைத்தும் ஞான நெறியையே பற்றி எழுவனவாம், குறிக்கோளைப் பற்றியனவல்ல. இம்மாறுபாடுகளை மதிப்பிட உரைகல்லாவது, அவை நித்தியமான ஞானக் குறிக்கோளை நோக்கி நம்மை வழிநடத்தும் திறனைப் பெற்றுள்ளனவா என்பதே. கற்பு நெறியைக் கண்டிப்போர், நம்மாதர்க்கு மெய்ஞ்ஞானத்தை அடைய வேறு பயன்தரும் முறைகளைக் கண்டுபிடித்துக் கூறியுள்ளனரா? கண்டுள்ளனராயின் அவர்கள் நன்னெறியிற் செல்பவரேயாவர். அல்லராயின், சிற்றின்பச் சேற்றிற் புக்கழுந்தி வாழ்வைப் பாழாக்கும் பொருட்டு, கற்பு நெறியென்னும் விழுமிய குறிக்கோளின் கடுமையினின்றும் தப்ப வழிதேடுகின்றனரா? அவ்வாறாயின் அவர்கள் குற்றச்சாட்டுக்கு உரியவரே. எவ்வாறெனில், இந்திய மகளிர்க்கோ ஆடவர்க்கோ மலர்தூவியுள்ள பாதை இருக்கவொண்ணாது. புது நெறியோ பண்டைய நெறியோ எதுவாயினும், எப்போதும் மலையேறிச் செல்லுதல் போன்றே அதுகடுமை மிக்கதாதல் வேண்டும். குறிக்கோளைத் தாழ்த்தற்கு அறிஞர் இறையும்

இடங்கொடார். மலைச்சிகரத்தைச் சார்தற்கும் புதிய நெறி களையே கண்டு பிடித்தல் இயலலாம்.

ஆதலால் இரண்டாவது வினுவிற்குரிய விடை வெளிப் படையே. மணவாழ்வு எனும் குறிக்கோளில் மாறுபாடுகள் நிகழ்தலுமாம். கற்பு நெறி வருங்காலத்தும் மறையாதொளிரும். ஆனல் இல்லற வாழ்வு நன்றியார்ந்த தோழமை உறவாகவே மட்டும் கருதப்படலாம்; மனைவியின் ஞானக்குறிக்கோள்வாழ்வு எனும் கொடி படர்தற்குக் கொள்கொம்பு இல்வாழ்வில் அமை யாது, வேறு வாழ்க்கைத் துறைகளில் அமையலாகும். அது போன்றே இளமாதர் பலர் மனையறம் பூணுது பிரம்மசரிய வாழ் வையே தமது வாழ்க்கைக் குறிக்கோளை எய்துதற்கு அதனினும் தகைசான்ற நெறியாகக் கருதலாம். காரணம் யாதெனின், மனித ஆற்றல்களைச் சிதறவிடாது குவியச் செய்தற்கு மிக்க சந்தர்ப்பங்களை அளித்து, அவ்வாயிலாக மெய்யுணர்வு பெறு தற்குச் சீரிய நெறியாவது அது என்பதே.

சூழ்நிலை தற்காலம் மாறி வருவதைக் கூர்ந்து நோக்கிச் சிந்தித்தே வருங்கால மாதர் வாழ்வு எவ்வுருப் பெறலாகும் என்பதை ஒருவாறு முன்னுணர்ந்து கூறலானேம். அச்சூழ்நிலை யில் அஞ்சத்தக்க யாதொன்றையும் காண்கிலோம். அவ்வுரு வைப் பெறவேண்டின் நம் மாதரின் மனப்பான்மையிலும் உலகை நோக்கும் நிலையிலும் ஆழ்ந்த மாற்றம் விளைந்தாக வேண்டும் என்பதை நாம் ஒப்புக்கொள்ளாதிருக்க முடியாது. ஆனல் அம்மாற்றம் நமது நன்மைக்கே அடிப்படையாகும் என்பதும் திண்ணம். ஸமூக வாழ்வில் தோன்றும் பெரும் மாறு தல்கள் உலகம் முழுதும் பரந்துள்ள உயிரின் உள்ளத்திலே ஆழ்ந்த பிரதேசங்களினின்றும் எழுவன என்று முன்னரே குறித்தோம். அவற்றை எம்மனிதனும் அடக்க வல்லவனல்லன். ஆனல் ஒரு நிலையினின்று நோக்குங்கால், வாய்திறவாது அவற்றிற்கு அடங்கி யொழுகுவதே மனிதனது கடமையாம் எனினும், இன்னெரு நிலையினின்று நோக்குங்கால், காலத் திற்கியைய மாற்றியமைத்துக் கொள்ளுதற்காகத் தாழாது முய லுதலும் கடமையாம். மனிதன் முன்னேற்றம் எய்துவது, குறிக்கோளுக்கொத்த வாழ்விற்கும் உண்மையான வாழ்விற் கும் இடையே நடைபெறும் ஒயாத போராட்டத்தினுல்தான்.

குறிக்கோளுக்கு இயைந்த வாழ்வின் அடக்கத்திற்குத் தனது மெய்யான வாழ்வினை உட்படுத்தவே மனிதன் சதா போராடி வருகிருன். இவ்வாறு போராடச் சக்தியை முழுதும் ஊட்டுவது குறிக்கோளைப் பற்றிய உணர்வே என்பதன்று. ஸமூக வாழ்க்கையிலும் பண்பாட்டு வாழ்க்கையிலும் உள்ள சம்பிரதாயங்களை விடாது தொடர்ந்து பாதுகாக்கும் அவா உள்ளத்து உறைதலின், அதுவும் ஓரளவு ஆற்றலை ஊட்டுகிறது. பழைய சம்பிர தாயங்கள் அழியும்போது, ஸமூகமும் இல்லாது ஒழிகிறது. வாழும் சம்பிரதாயங்கள் வர்த்தமானங்களின் மாற்றத்திற்கு ஏற்றவாறு திருத்தியமைக்கப்படுதல் மூலமாகவே, மனித வர்க்கம் மெய்ப்பொருளின் ஆழ்ந்த பகுதிகளினின்றும் வாழ்வெனும் சாற்றை மேலே உறிஞ்சுவதாகத் தோன்றுகிறது.

மாதரின் பதவியில் பின்வரப்போகும் மாறுபாடுகளைப்பற்றி அவநம்பிக்கை கொள்ளுதற்கும், அவற்றைத் தற்காலம் எதிர்த்து நிற்பதற்கும் உண்மையான காரணமாவது, பழையவற்றுக்கும் புதியவற்றுக்கும் நடுவேயுள்ள இணைப்பு ஒன்றை நாம் காணமுடியாமையே. புதியவற்றைக் கண்டு வெளிப் பார்வைக்கு அஞ்சுவது இந்துவின் வழக்கம். ஆனல் அவை தன் பண்டைய கொள்கையினின்றும் தருக்க முறைக் கிணங்கப் பெறப்படுவன என்பதை அவனுக்கு எடுத்துக் காட்டியதும், அவை அடிப்படையை மாற்றுவதாயிருப்பினும், அவற்றை மகிழ்ச்சியோடும் தன்னம்பிக்கையோடும் வரவேற்பான். இந்து ஸமூகத்தில் வடமொழியிலுள்ள வேதவாக்கியங்கள் பேரளவிற்குப் பிரமாணங்களாவதை யாரும் அறிவர். இந்துமத தீர்க்கதரிசிகளும் சீர்திருத்தக்காரரும் தங்கள் தங்கள் புதுக்கொள்கைகட்குப் பழைய சாஸ்திரங்களிலே ஆதாரம் தேடியுள்ளார். அதில் அடங்கிய கருத்து யாதோ எனின், பழைய சம்பிரதாயங்களைத் தொடர்ந்து பாதுகாத்து வரவேண்டும் என்பதே. நம் மாதர் கருத்திற்கொண்ட புதுக் குறிக்கோள்கள் நம் பண்டைய கொள்கைகளில் அடங்கியுள்ளவையே என்பதைக் காட்டுதல் எளிதேயாம் என்பது எமது நம்பிக்கை. தற்கால மாதரியக்கங்கள், பௌராணிகக் குறிக்கோள்களைவிட்டு மீண்டும் வேதகாலக் குறிக்கோள்களைப் பற்றுதலேயாம் என்பது எமது கருத்தாம்,

இதுவரை நமது ஸமூக வாழ்வும் ஞான வாழ்வும் பௌராணிக இலக்ஷியங்களின் இறுகிய பிடிப்புக்கு அடங்கியே நடைபெற்றுவந்தன. வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும், பெண் மக்களது வாழ்வுத் துறையில் மட்டுமன்று, வேதங்களில் திகழும் குறிக்கோள்களை நோக்கியே மீண்டுவருகிறோம். பௌராணிக இலக்ஷியங்கள் தவறானவை யென்றோ, நமது தேசிய வாழ்வும் தனி வாழ்வும் கழிந்த பல நூற்றாண்டுகளாகப் பிழைபட்டுப் பாழடைந்து வரலாயின என்றோ, யாம் கூறியதாகக் கருதலாகாது. யாம் கூறக்கருதியது யாதெனின், முதன்மையான முன்னேற்ற நெறியினின்றும் விலகிவிட்டோம் என்பதே. ஆனால் அதன் பயனாக நாம் கேடடைந்தோம் என்பதன்று; அதற்கு மாறாக நமது மதம் புதிய ஞானஅனுபூதிச் செல்வத்தாலும், பலவகையான பண்பாடுகளோடும், மக்களினங்களோடும் தொடர்புகொள்ளும் பேற்றினாலும் பொலிவடைந்தது என்பதே உண்மையாம். புத்தர் பிரானின் போதனைகள், மக்கட்குள் உறையும் வேறுபாடுகளைப் பொருட்படுத்தாதும், தகுதியை ஆராயாதும், மக்கள் அனைவர்க்கும் வள்ளல்தன்மையோடு வழங்கப்பட்டபோது, பலரும் இந்து மதத்தைத் தடையின்றித் தழுவலாயினர். புதிதாக இந்துமதக் கோட்டைக்குட் புகுந்த இம்மக்கள் பெரும்பாலும் பண்பாடற்றவர்களாயினமையால், இந்துமதமும் பண்பாடும் கொண்டுள்ள அடிப்படைக் கொள்கைகளை அவர்கள் உட்கொண்டு வாழ்க்கையாக மாற்றுதற்குப் போதிய வளர்ச்சி வேண்டியதாயிற்று. அதற்கு வசதியளிக்கும் பொருட்டே சமயத்துறையில் உருவும் முக்குணமும் அற்ற உயர்ந்த இலக்ஷியங்களை வற்புறுத்தாது, உருவும் முக்குணமும் பெற்ற எளிய இலக்ஷியங்களை வற்புறுத்தல் இன்றியமையாததாயிற்று. இதுவே புராணங்கள் தோன்றுதற்குக் காரணமாகும். வேதம் ஞானவாழ்க்கைக்குரிய குணங்கடந்த அடிப்படை உண்மைகளையே கூசாது வலியுறுத்துகின்றது; புராணமோ பல வகைகளைப் புகுத்துகின்றது. முன்னது மெய்யுணர்வெய்த நேரான கடுமையான நெறியைப் போதிக்கிறது. பின்னதோ சுற்றுவழியாக எளிதாக அதனையே அடையும் பல முறைகளைக் கூறுகின்றது. வேதம் பரம்பொருளின் உண்மையியல்பை எடுத்தோதி, பொய்ஞ்ஞானத்தையும் ஆசைகளையும் உகுத்துவிட்டு

நேரே அதனை உணரவேண்டுகிறது. புராணமோ, சாதாரண மனிதனுக்கு அந்த அழைப்பிற்கிணங்கிச் செல்லுதல் மிக மிக அரிது என்பதையும், உயர்ந்த குணங்கடந்த முறையைப் பின் பற்றற்கு எல்லா இயல்பினரும் தக்காரல்லர் என்பதையும் சுட்டிக் காட்டுகிறது. சாதாரண மனம் சிற்றின்பக் கவர்ச்சியை மீறிச் செல்லும் வன்மையற்றதாதலின், உலகப் பொருள்களையும் அனுபவங்களையும் ஞானமயமாக்குமாறு அறிவுறுத்தி, நீண்ட வளைவான ஒரு நெறி வழியாக மெல்ல மெல்ல மேலேறச் செய்து, உச்சிக்கு அழைத்துச் செல்கிறது. சாதாரண வாழ்விற் காணும் பொருள்களையும் அனுபவங்களையும் தெய்விக மய மாக்கும் அன்பு நெறியைப் புகட்டுவது புராணத்தின் சிறப்பியல்பு. எல்லாம் கடவுள்மயம் என்ற வேதஉபதேசமே அவ்வாறு அனைத்தையும் தெய்வமயமாக்க ஓர் ஆதாரத்தை அளிக்கின்றது. கற்பு நெறி என்பது, உலகியல் வாழ்வைத் தெய்விக வாழ்வாக ஆக்குதற்குரிய பலமுறைகளில் ஒன்றாகும். மனிதனை கணவன் அந்நெறியால் தெய்வமாக்கப் படுகிறானன்றோ? புராணம் காட்டும் சுற்றுவழியால் பொதுமக்கட்குக் கிரியைகளும், ஞானசாதனப் பழக்கமும் மிக நெருங்கி வருகின்றன, பற்றுதற்கு எளிதாகின்றன. ஆயினும் பௌராணிக மதத்தி லுள்ள ஒரு பெருங்குறையாவது : பரம்பொருளிடம் நேராகக் குறுக்கு வழியிற் செல்லும் திறனுடையார்க்குச் சுற்றுவழியைச் சார்தல் அவசியமன்று என்பதை நாம் மறக்கும்படிச் செய்து விட்டது என்பதே. வேதக் குறிக்கோளைச் சாரப் பௌராணிக முறைகள் நெறியாவன என்பதன்றி வேறில்லை. நெறியைக் குறியாக எண்ணி மயங்கும் இழுக்குக்கு ஆளாயினமைபற்றி நம்மிடம் குறுகிய மனப்பான்மையும் ஆற்றலின்மையும் குடிகொள்ளலாயின. பரந்த உள்ளத்தையும் நேர்காட்சித் திறனையும் நல்கும் நலன் உபநிடதங்களிலே காணக்கிடக்கின்றது; உபநிடத நெறி ஞான நெறியாகின்றது, அன்பு நெறியன்று.

இன்று மீண்டும் ஓர் அழைப்புக்குரல் நம் செவியினை ஈர்க்கின்றது; இவ்வுலகிலே கால தேசவர்த்தமானங்களில் ஏற்பட்ட வேறுபாடு நம்மை அருவமான, குணங்கட்கு அப்பாலான, உயிரளிப்பனவான வேதக் குறிக்கோள்களையும் கருத்துகளையும் நோக்கி உந்துகின்றது. இடைக்காலமான பௌராணிககால

அனுபவங்களும் ஈட்டல்களும் நமது ஞானச் செல்வத்தை வளர்த்துள்ளன. வேத போதனைகளிலுள்ள ஆழ்ந்த கருத்துகளை விளக்க உதவின. நாம் தற்காலத்தும் எதிர்காலத்தும் முதிர்ச்சி யடைவதற்கு வேண்டிய வலிமையையும் தருக்க அடிப்படை யான பெருங் கருத்தையும் வேதக் குறிக்கோளில் மட்டுமே நாம் காணலாகும். ஆக நம் மாதரும் வேதக்குறிக்கோளை நோக்கியே மீண்டும் செல்லவேண்டும். வேதக் குறிக்கோளின் படி, ஆணோ பெண்ணோ ஒவ்வொருவரும் உடல் மனம் முதலாய உபாதிகள் அனைத்தையும் கடந்த, பால்வேறுபாடற்ற, வடிவ மற்ற ஆன்மாவே யாவர். மாதர் இந்த வடிவமற்ற ஆன்மக் குறிக்கோளின் ஆவேசத்திற்கு இன்று ஆட்பட்டுள்ளனர். அவர் களும் தம்மைப் பால்வேறுபாட்டு உணர்ச்சியாற் கட்டுருத தூய ஆன்மாவாக நினைந்து, ஆன்மாவிற்குரிய சிறப்பும் மதிப் பும் பெருக ஒழுகவும் வாழவும் கற்றுக் கொள்ளல் வேண்டும். பௌராணிகமான கற்புநெறி ஆன்மஞானம் பெறுதற்குரிய நெறிகளில் ஒன்றேயாம். நம்மை உடலாகவும் மனமாகவும் கருதும் மயக்கத்தினை ஒழிக்கக்கூடுமாயின் நாம் அதற்கு எந் நெறியைப் பின்பற்றினாலும் என்? ஒருவர் தம்மைச் சுத்த சைதன்யமான ஆன்மாவாக இடையருது நினைத்துக் கொண் டிருப்பதன் பயனாக மோகத்தை வென்று மெய்ஞ்ஞானம் எய்து வர் என்று அழுத்தமாக வேதம் கூறுகின்றது. ஆதலால் வேதப் பிரமாணத்தைக் கொண்டு மாதரும் தம் இச்சைப்படி யாதேனும் ஒரு மெய்யுணர்வு நெறியைப் பற்றும் சுதந்தரம் பெறவேண்டும்; சதா தம்மை ஆன்மாவாக உணர்தலால், பெற லரும் தூய்மையையும் பலத்தையும் இனிமையையும் அடைதல் வேண்டும். இவ்வுயர்ந்த இலக்கியத்தின் ஆவேசத்திற்கு உட் பட்டார், ஆணாயினும் பெண்ணாயினும், இல்வாழ்விலோ ஸமூக வாழ்விலோ ஈடுபடினும், மதிப்பிலாத தவருன முறையிலே ஒரு போதும் உணரவோ ஒழுகவோ மாட்டாதவராவர். ஆண்கட்குப் போல் பெண்கட்கும் வாழ்வு நிறைவுற்றும் மேன்மையுற்றும் திகழும். ஆதலின் வேதக்குறிக்கோளாகிய மணிமுடிசூடி வருங்கால மாதர் அரசியராய் வீற்றிருக்கும் பேற்றை அச்ச மின்றியும் நம்பிக்கையோடும் கோதுகலத்தோடு எதிர்பார்த்து நிற்போமாக!.

# "பொம்மலாட்டம்"

வித்துவான்: திரு. ம. சிவசம்பு அவர்கள்
*தமிழ்ப் பேராசிரியர்,*
*தருமையாதீன தமிழ்க்கல்லூரி, தருமபுரம், மாயூரம்.*



தமிழ் நாட்டில் தலைசிறந்த கிராமியக் கலைகளில் பொம்மை யாட்டம் ஒன்று. பொம்மை யாட்டம் என்ற தொடர் பொம்ம லாட்டம் என்று உலகியலில் மருவி வழங்குகின்றது. மரத்தி னால் பொம்மைகள் செய்து அதற்கு வேண்டிய ஆடை ஆபர- ணங்கள் எல்லாம் அணிந்து கயிற்றின் துணைக்கொண்டு அதனை இயக்குகிறார்கள். பொம்மைகள் மேடையின்மீது ஆடும் பொழுது உயிருள்ள மனிதர்கள் ஆடுவது போன்று தோன்றுமே யல்லாமல் அவைகள் மரப்பொம்மைகள் என்ற எண்ணம் தோன்றுவதில்லை. மரத்தால் பொம்மைகள் செய்வது போல தோலால் பொம்மைகள் செய்து இயக்குவதும் உண்டு. இதற்குப் பாவைக்கூத்து என்று பெயர். பொம்மலாட்டத்திலும் பாவைக் கூத்திலும் அப் பொம்மைகளை இயக்குகின்றவர்கள் வெளியே தெரிவதில்லை. பொம்மலாட்டத்திற்கும் பாவைக் கூத்திற்கும் சிறிது வேறுபாடு உண்டு. பொம்மலாட்டத்தில் பொம்மைகள் மேடையில் காட்சி தருகின்றன. பாவைக்கூத்தில் பொம்மைகள் திரைக்குள் காட்சி தருகின்றன. பொம்மலாட்டத்திலும் பாவைக் கூத்திலும் பொம்மைகள், கயிறு, இயக்குநர் முக்கிய அங்கங் களாகக் கருதப்படுகின்றன. பொம்மைகளை இயக்குவதற்குப் பயன்படுவது கயிறுகள். கயிற்றின் உதவியால் பொம்மைகள் மேடைமீது ஆடுகின்றன. சிலருக்கு இந்த உண்மைகள் விளங்கு வதில்லை. பொம்மைகள் தானாகவே இயங்குகின்றன என்று கருதுகின்றனர். அவர்களின் அறியாமையை என்னென்று சொல்வது ?

இப் பொம்மலாட்டத்தின் தத்துவத்தை வைத்துக்கொண்டு சமய உலகத்தில் புரியமுடியாத பெரிய உண்மையைக் குரு ஞானசம்பந்தர் எளிதில் விளக்குகிருர். சிலர் எல்லாக் காரியங் களும் தனது செயலால் நடக்கின்றன என்று பெருமை கொள் கின்றனர். நான் உதவி செய்தேன் இல்லையேல் அவன் முன் னேற முடியுமா என்று கேட்கிருர்கள்? நான் நினைத்தால் அவனைக் கெடுத்து விடுவேன் என்றெல்லாம் கூறுகிருர்கள். இவர்கள் செய்கையை நினைத்தால் நகைப்புத்தான் வருகிறது. நன்மை தீமைகளை எல்லாம் தாங்கள் ஏற்படுத்தி விடுவதாக எண்ணுகின்ற எண்ணத்தை என்னென்று கூறுவது?

இவர்கள் நல்லதன் நலனும் தீயதன் தீமையும் உணர சக்தி யற்றவர்கள். நல்லதன் நலத்தையும் தீயதன் தீமையையும் அவனவன் செய்த கன்மத்திற்கேற்ப இறைவன் உண்டாக்கு கிருன். இந்தக் காயமாகிய மரப்பாவையை இறைவன் கன்மம் என்ற கயிறு கொண்டு இந்த உலகமாகிய நாடகமேடையில் ஆட்டி வைக்கிருன். இக்கருத்தைக்கூறும் பாடலைப் பாருங்கள்:

“வன்மைபுரிகாய மரப்பாவை தன்னையரன்
கன்மமெனுஞ் சூத்திரத்தால் கட்டியே--நன்மைதின்மை
ஆட்டுவது நாடா தறிவிலார் தஞ்செயலாய்
நாட்டுதல் போல் உண்டோ நகை. (சிவயோகசாரம். 90)

வள்ளுவத்தில் மரப்பாவை:

மனத்தில் நாணம் இல்லாமல் உலகத்தில் இயங்குதல் மரத்தால் செய்த பாவை கயிறு கொண்டு ஆட்டி உயிருள்ளதாய் மயக்கினுர் போன்றதாகும் என்கிருர் வள்ளுவர்.

“நாண் அகத்தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணுல் உயிர் மருட்டி யற்று.”

மரப்பாவை மனிதர்கள் போல் இயங்கினுலும் அது இன்பதுன்ப உணர்ச்சிகளைக் காட்டமுடியாது. ஈதலால் உண்டாகும் இன் பமும் இரத்தலால் உண்டாகும் துன்பமும் உடையது இவ்வுலகு. இரப்பவர்கள் இல்லையானுல் ஈவோர் ஈத்துவக்கும் இன்பத்தைப்

பெற முடியாது. இன்பமும் துன்பமும் இல்லாத உலகத்தில் நடமாடும் மனிதனும் மரப் பாவைதான். இரப்பவர் இல்லாத இப்பெரிய உலகத்தின் இயக்கம் மரத்தால் செய்தபாவை கயிற் றினுல் ஆட்டப்பட்டுச் சென்று வந்தாற் போன்றதாகும் என்ப தையும் வள்ளுவர் கூறுகிருர்.

"இரப்பாரை இல்லாயின் ஈர்ங்காண்மா ஞாலம்
மரப் பாவை சென்றுவந்தற்று."

**வாசகத்தில் பாவைக்கூத்து:**

நல்லபண்புகள் உள்ள மனிதர்களைத்தான் நாம் மனிதர்கள் என்று மதிக்கிருேம். நல்லபண்புகள் இல்லாதவர்கள் மனிதர் களாகப் பிறந்தாலும் மரக்கட்டைகளாகவே எண்ணுகின்ருேம். நல்ல ஒழுக்கம், விரதம், அடக்கம் முதலிய பண்புகள் மனிதர் களுக்கு இன்றியமையாதவை. பண்பு இல்லாத மனிதர்களும் உலகத்தில் திரிகிருர்கள்: ஆடுகிருர்கள். இவர்கள் ஆட்டத் திற்கும் தோல் பாவை ஆட்டத்திற்கும் என்ன வேறுபாடு இருக்கிறது.

இந்த உணர்ச்சி அற்ற தன்மையை (தோற்பாவைத் தன் மையை)ப்போக்கி என்னை ஆண்டு கொள்ள வேண்டும் என் கிருர் மாணிக்கவாசகர்.

இறைவனை அடைவதற்கு நல்லொழுக்கமும், அந் நல்லொ ழுக்கம் வளர்வதற்கு ஏதுவாகிய விரதமும்; அவ்விரதம் வளர் வதற்கு இன்றியமையாத அடக்கமும்; அவ்அடக்கத்திற்கு ஏது வாகிய அறிவும் தேவை. இதை சமய உலகத்தில் சரியை கிரியை, யோகம், ஞானம் என்பார்கள். இவைகளை உணராமல் இருப்பவர்கள் மனிதர்களாகப் பிறந்தாலும் தோற்பாவைகளே. இதைச் "சீலமின்றி நோன்பின்றிச் செறிவே யின்றி அறிவின்றித் தோலின் பாவைக் கூத்தாட்டாய் சுழன்று விழுந்துகிடப்பேனை" என்று தன் மேல் ஏற்றிக்கூறுகிருர். அவர் இறைவனிடம் தன்னிடம் உள்ள மாயைஉணர்த்தி, அதை நீக்க வழிகாட்டி, விட்டுலக நெறிகாட்டி, உன்கோலம் காட்டி அடியேனை ஆட் கொள்வது என்ருே என்கிருர்.

"சீலமின்றி நோன் பின்றிச்
செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட் டாய்ச்
சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலும் காட்டி வழிகாட்டி
வாரா வுலக நெறியேறக்
கோலம் காட்டி யாண்டானைக்
கொடியேன் என்று கூடுவதே,"

இதை எல்லாம் உணர்ந்த நாம் மரப்பாவைகளாக, தோற்பாவைகளாக இயங்காமல் சமய உண்மைகளைக் கடைப்பிடித்து மாண்புள்ள மனிதருக வாழ்வோம்.

——

---

## இராக மாலிகை

இராகம் :- சங்கராபரணம்,

தேனுெடு பால்கலந்த சுவையே, தெவிட்டாத தெள்ளமுதே
தீஞ்சுவைதரும் கனியே, திருவே – உயர்
ஞானகுருவே, என்உயிரே, வானவர் கோனே
" திருப்பரங்கிரி " மேவும் திருமுருகோனே.

இராகம் :- சண்முகப்பிரியா.

சதிராடும் அலைமேவும் கதிரொளியே
சந்ததமும் " செந்தில் " வளர்சண்முகவடிவே
மதிசூடும் அரனுேடு கனிவேண்டி மருள்கொண்ட
தென்" பழநி "ப்பதிஞானியே, தெண்டபாணியே.

இராகம் :- மோகனம்.

அரனுமகிழ ப்ரணவப் பொருள்கூறிய
சரவணபவ " சாமிமலை " யுறைசற்குருவே
நாரணனும் நான்முகனும் புகழ்
" குன்றுதோருடி " வரும், குமரகுருவே.

இராகம் :- கானடா.

என்னரும் நிதியே எனக்கினிய உறவே
பரம்பொருளே " பழமுதிர்சோலை " வாழ்பாலா – என்றும்
அன்பர் மனக்கோயிலமரும் அண்ணலே
உன்னையன்றி யார்துணை உலகினிலே – முருகவேளே.

திரே. பாலகிருஷ்ணன்,
நிர். 25-நடுக்கல்லுக்காரத் தெரு, மரக்கடை P.O. திருச்சி–8.



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் காஞ்சிபுரம் ஸ்ரீஏகாம்பரநாதர் திருக்கோயிலில் நிர்மாணிக்கப்பெற்ற சிவ சிவ ஒலிமண்டபம் 25-2-60 உ திறந்து வைக்கப்பட்ட ஞான்று நடைபெற்ற திருமுறைப்பாராயணத்தில் கலந்து கொண்ட திருமுறை வாணர்கள்.



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் காஞ்சிபுரம் ஸ்ரீ ஏகாம்பரநாதர் திருக்கோயிலில் நிர்மாணிக்கப்பெற்ற சிவசிவ ஒலிமண்டபத்தை 25-2-60ல் சென்னை H. R.&C. E. கமிஷனர் திரு. அ. உத்தண்டராமன் அவர்கள் ஐ. ஏ. எஸ். திறந்து வைத்தார்கள். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி பிரின்ஸிபால் திரு. கே. எம். வேங்கடராமையா சொற்பொழிவாற்றுகிறார்.




# திருமந்திரம்

திரு. A. C. ஷண்முக நயினர் அவர்கள்,

நீதிவாதி, தென்காசி,

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் நான் சென்னையில் மாணவனாயிருந்த போது ஒரு நாள் சில சக மாணவர்களுடன் அந் நகரில் கீழப்பாக்கத்திலுள்ள பைத்தியக்காரர் நிலையத்தைப் பார்க்கச் சென்றிருந்தேன். நிலயத்தின் முன்பக்கத்தில் ஓர் அறையில் அழுக்கற்ற ஆடைகளணிந்த நடுவயதுள்ள ஒருவர் நாற்காலியில் அமர்ந்திருந்தார். அவரை நிலயத்தின் அலுவலகர் என்று எண்ணினோம். பார்ப்பதற்கு அப்படித்தான் தோன்றினார். எங்களைக் கண்டதும் "வாருங்கோ ஸார், வாருங்கோ உள்ளேயிருக்கும் கிறுக்கர்களைப் பார்க்க வந்தீர்களா." என்று வரவேற்றுப்பாடஆரம்பித்தார். பாடியபாட்டுகிறுக்கர் உளறலைப் போலவேயிருந்தது. பாடிமுடிந்ததும் "உள்ளே போங்கோ, போங்கோ" என்று கூறி மீண்டும் அதே பாட்டைப்பாடினார். எங்களுக்குத் திகைப்பு உண்டாயிற்று. இவரும் ஓர் கிறுக்கரோ என்ற ஐயம் பிறந்தது. அவர் பாடியது,

"வழுதலை வித்திட்டப் பாகன் முளைத்தது
புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது
தொழுது கொண்டோடினர் தோட்டக்குடிகள்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே"

திரும்பத் திரும்ப இவர் இதே பாட்டைப் பாடியதால் இவர் கிறுக்கர் என்ற தீர்மானத்திற்கு வந்தோம். அப்போது இப் பாட்டின் பொருள் எங்களுக்குப் புலப்படவில்லை. கிறுக்குப் பாட்டாகவே தோன்றிற்று.

பிற்காலத்தில் இப்பாட்டை ஓர் புத்தகத்தில் படித்தேன். படித்த பிறகுதான் நிலயத்தில் வரவேற்புக் கொடுத்தவர் ஓர்

படித்த மனிதர். முளைக் கோளாறினால் அங்கே இடம் பெற்றிந்தார் என்று முடிவு செய்தேன். பாட்டு ஒருமாதிரியாகத் தானிருக்கும். கத்தரி விதைக்கப் பாகல் முளைக்குமா? புழுதியைத் தோண்டப் பூசனி பூக்குமா? அதில் வாழைக்கனி உண்டாகுமா? என்ன கிறுக்குத்தனம்! ஆம். அப்படியே செய்தது. சிவ போதத்தில் ஆழ்ந்த ஓர் கிறுக்கன் போன்ற முனிவரளித்த தத்துவப் பொக்கிஷமல்லவா? திருநெறிகாட்டும் நன்னெறியல்லவா ?

வழுதலைவித்து- கத்தரி வித்தை (யோகாப்பியாசம்). பாகல்- வைராக்கியத்தின் சின்னம்: புழுதியைத் தோண்டல் - தத்துவ ஆராய்ச்சி செய்தல்: பூசணிப்பூ-சிவம்: தோட்டக் குடிகள் - உடம்பிலுள்ள இந்திரியங்களின் சேஷ்டைகள்: வாழைக்கனி - ஆன்ம சுத்தியும் ஆன்மலாபமும்: முற்றும் பழுத்தது - நன்ருகச் சித்தித்தது. இப்போது பாட்டைத் திரும்பவும் படிக்க எவ்வளவு தத்துவ உண்மை, நுட்பம், மறைந்து கிடக்கின்றது என்பது நன்கு விளங்கும்.

இவ்விநோதப் பாட்டைப் பாடியவர் யார்? அவர் பைத்தியக்காரரா? ஆவடுதண்துறையில் அரசமரநிழலில் (போதி நிழல்) சிவன் நாமங்கள் ஒதி ஏகாக்கிர சித்தமாய் அமர்ந்து "திருமந்திரம்" என்ற ஓர் அரிய சித்தாந்த நூலைத் தந்த பெருவள்ளல் திருமூலர் அல்லவா? ஆகமப்பொருள்களை யெல்லாம் கடைந்து வெண்ணெய்போல் திரட்டிக் கொடுக்க இறைவனால் ஆணை பெற்ற பெரு முனிவரல்லவா அவர் ?

"என்னை நன்ருக இறைவன் படைத்தனன்
தன்னை நன்ருகத் தமிழ் செய்யுமாறே."

என்று அவரே கூறுகின்ருர். தான் செய்த நூலை 'மந்திரமாலை' யென்றழைக்கின்ருர்.

அகத்திய முனிவரைப் பொதிகை மலையிற் கண்டு சிலநாட் தங்க அவாவிய ஒரு நான்மறை யோகி, கயிலையிலிருந்து புறப்பட்டு அநேக தலங்கள் வணங்கி காவிரி நதிக்கரையில் சாத்தனூரில் வந்ததும் பசு மேய்க்கும் மூலன் என்பான் பசுக்களை மேய்க்கும் போது இறந்து விழ, பசுக்கூட்டங்கள் அவன் உடம்பைச் சுற்றி அழுதன. சிவயோகி அதைக்கண்டு பரிந்து

கூடுவிட்டுக்கூடு பாயுந்சித்தியால் மூலன் உடம்பில் தமதுயிரை பாய்த்தினுர். பின் திருமூலராய் எழவும் பசுக்கள் நக்கிமோந்து வாலெடுத்துத்துள்ளிக் குதித்து விளையாடின. மாலைப்பொழுது வந்ததும் திருமூலர் பசுக்களைச் சாத்தனூருக்குத் திரும்பக் கொண்டு போய்விட்டுவிட்டு மூலன் வீட்டினுட் புகாமல் வெளியே நின்ருர். மனைவி தன் கணவனென்றெண்ணித் தொட்டழைக்க வந்தாள். இவர் "உனக்கு என்னுடன் அணைவொன்றுமில்லை" யென்று மறுத்து ஒரு மடத்திற் புகுந்து யோகத்திலமர்ந்தார். மறு நாள் மனைவி நல்லார் பலரிடம் முறையிட அவர்கள் மூலர் நிட்டையிலிருப்பதைப் பார்த்து "இது பித்துமன்று, மயலுமன்று, தெளிந்த சிவயோகமே" என்று கூறியகன்ருர்கள். பின்னர் திரு மூலர் நிட்டைகலைந்தெழுந்து தான்முன்பு அரண்செய்து வைத்த யோக உடலைக்காணுமல் மெய்ஞ்ஞானத்தால் ஆராய்ந்து சிவ பெருமான் தந்த ஆகமப் பொருளை உலகினர்க்குத் தனது வாக்கினுல் தமிழ் வகுப்ப இறைவன் திருவுளம் கொண்டு தம துடலைக் கரப்பித்தார் எனத்தெளிந்தனர். திருவாவடுதுறை சென்று இறைவனை வணங்கி மேற்குப் புறத்தில் ஓர் அரசமரத் தின் கீழமர்ந்து சிவயோகம் புரிந்து 3000 ஆண்டுகள் இருந்து ஆண்டுக்கொன்ருக 3000 திருமந்திரம் ஓதி மீண்டும் திருக் கயிலை யடைந்தார்.

சேக்கிழார் பெருமான் இவ்வரலாற்றிற் கூறியிருப்பதாவது

"ஊனுடம்பிற் பிறவி விடந்தீர்ந் துலகத் தோருய்ய
ஞான முதல்நான் குமலர் நல்திருமந்தி ரமாலை
பான் மைமுறை ஓராண்டுக் கொன்ருகப் பரம்பொருளாம்
ஏன எயிறணிந்தாரை ஒன்றவன ருளென எடுத்து"

"முன்னிய அப்பொருண் மாலைத் தமிழ் மூவாயிரஞ்சாத்தி
மன்னிய மூவாயிரத் தாண்டிப் புவிமேல் மகிழ்ந்திருந்து
சென்னிம தியணிந்தார் தம் திருவருளாற் றிருக்கயிலை
தன்னிலணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார்"

திருமூலர் என்னும் பெயரிலேயே ஓர் நயம் காணக்கிடக்கின்றது; சிவபெருமானுடைய பேரருளாகிய திருவை ஆன்மாக்கள் பெறு வற்கு இவர் இயற்றிய திருமந்திரம் ஓர் மூலமாக விளங்கும் என்ற காரணத்தாலே திருமூலர் என்றபெயர் அமைந்தது போலும்!

சுந்தரமூர்த்திசுவாமிகள்9-ஆவதுநூற்ருண்டில்திகழ்ந்தார். அவர் திருத்தொண்டத் தொகையில் "நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்" என்று துதிப்பதால் 9-ஆவது நூற்ருண்டுக்கு முன்னிருந்தார் திருமூலர் என்பதில் ஐயமில்லை. சில ஆராய்ச்சியாளர்7-ஆவதுநூற்ருண்டிலிருந்ததிருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் காலத்திற்குமுன் இருந்தவர் என்று கொள்கின்றனர். நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியிலும் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்திலும் திருமூலர் வரலாறு கூறப்படுகின்றது. ஆயின் இவர்கள் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குப் பிற்பட்டவர்கள்.

சைவத் திருமுறை பன்னிரண்டில் திருமந்திரம் பத்தாவதாக இடம் பெற்றிருக்கின்றது. பன்னிரண்டாக வகுத்ததன் உட்கருத்து, பக்குவமுடைய ஆன்மாக்களுக்கு அருள்தரும் பொருட்டு இறைவன் குருவடிவந்தாங்கி வந்து கிரியாவதி ஞானவதி என்னும் இருவகையான திக்கைகளைப் புரிந்து அத்துவசுத்தி செய்யுங்கால் நிவிர்த்திகலை முதலான ஐங்கலைகளிலும் பதினெரு மந்திரங்களும் நிற்குமுறை காட்டிச் சங்காரக்கிரமத்தில் வைத்து மலமகற்றிச் சிவம் விளங்குமாறு செய்வன். அவற்றுள் நிவிர்த்திகலையில் மந்திரங்கள் (2) பிரதிஷ்டா கலையில் (2) வித்தியா கலையில் (2) சாந்தி கலையில் (2) சாந்தியாதீத கலையில் (3)ஆம் ஆகப் பதினெரு மந்திரங்களும் வியாத்தியாக நிற்குமெனச் சிவஞானசித்தியார் 8-ஆம்சூத்திரம் 7–8–9 விருத்தங்களில் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் விளக்கியருளுவர். 'அன்றியும் மகுடாகமம் முதலிய சில ஆகமங்களிலும் சாந்தியாதீத கலையில் நேத்திர மந்திரமொன்றும் கூடி வியாத்தியாய் நிற்குமெனவும் சிவாகமங்களை யுணர்ந்தோர் கூறுவர். ஆகையால் பெரிய புராணம் நேத்திர மந்திரம் போன்றது. இப்பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரிய புராணக் கண்கொண்டே மற்றைய திருமுறைகளின் மெய்ப் பொருளைக் காணவேண்டுமென்பதும் தெற்றென விளங்கும். ஆகையால் இப்பன்னிரண்டு திருமுறைகளும் நாம் உய்யும் பொருட்டுச் சிவபெருமான் நமக்குப் பெருங்கருணையால் அளித்த கருவூலம் என்பதற்குத் தடையாதும் இல்லை யெனப் பவானித் தமிழ் ஆசிரியர் திரு.K. குமாரசுவாமி பிள்ளை கூறுகின்றனர்.

திருமந்திரம் ஓர் ஞானநூல். பேரின்ப வீட்டைக் காட்டும் திருவிளக்கு. மந்திரம் என்னுஞ் சொல் வடமொழியில் திரண்டு வடிவமெடுத்த கருத்து எனப் பொருள்படும். ஓயாத சிந்தனை யால் புத்தியில் நிகழும் ஆழ்ந்த உண்மைத் தோற்றங்களே மந்திரங்கள். திருமந்திரம் ஒன்பது தந்திரங்களாகத் தொகுக்கப் பட்டிருக்கிறது. தந்திரம் என்றால் வடமொழியில் கயிறு எனலாம். ஆக இத்திருமந்திரம் பூக்களாகிய பாசுர மந்திரங் களாற் புனைந்த ஒன்பது சரங்கள் அடங்கிய அழகியதொரு சிறுமாலையென்று Dr. V. V. இரமண சாஸ்திரிகள் Ph. D. போற்றுகின்றார். 62-ஆம் பாட்டில் "நவஆகமங்கள் நந்தி பெற்றானே" என்பதால் 9 ஆகமங்களின் சாறு என்றும் கொள்ளலாம். ஒவ்வொரு தந்திரமும் ஒவ்வொரு ஆகமப் பொருளை விளக்கும். திருமூலர் பாத ரசம் பூநீர் முப்பு முதலிய வற்றைக் கைக்கொண்டு உடல் அழியா வண்ணம் செய்து நீடித்த காலம் வாழ உழைக்கும் சில சித்தர்களைப் போலல்ல. இச்சித்தர்கள் இயல்பை நன்றாயுணர்ந்து அதற்கும் அப்பாற் போய் விருப்பு வெறுப்பு ஒழித்து இடையறு மகிழ்ச்சியுடன் அறி துயிலில் அமர்ந்தவராகலின் திருமந்திர மென்னும் பெருநூலை இயற்றி உலகினர்க்கு வழங்க முடிந்தது. "நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையம்" என்று கூறித் தான்பெற்ற இன்பத்திற்கு இந்நூல் மூலம் ஓர் வழிகாட்டுகின்றார். நூலில் பாயிரப் பாக்களுக்குப் பின் ஒன்பது தந்திரங்கள் வருகின்றன. ஒவ்வொன்றிலும் பற்பல பிரிவுகள் உள்ளன.

பாயிரத்தில் முதன் முதலாக ஐந்து கரத்தன், யானை முகத்தன், இந்தின் இளம்பிறைக் கொம்பன், சிவன் மகன். ஞானக் கொழுந்தாகிய விநாயகரை புந்தியில் வைத்து அவர் அடி போற்றுகின்றார். அடுத்தாற்போல் சிவபெருமானின் இலட்சணங்களைச் சுருக்கிக் கூறுகிறார்.

"ஒன்று அவன்தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து
வென்றனன் ஆறுவிரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந்தான் உணர்ந் தெட்டே."

அவன், - ஏகன், - இன்னருள் இரண்டு- அறக்கருணை மறக் கருணை- அல்லது இறைவன் இறைவி, மூன்று - பதி, பசு,

பாசம், அல்லது சாத்விக, ராஜச, தாமசகுணங்கள், நான்கு - நால்வேதம், அல்லது சரியை கிரியை யோகம் ஞானம் அல்லது சாக்கிரம், சொற்பனம், சுழுத்தி, துரியநிலைகள், துரியநிலையே இறைவனை உணரும், ஐந்து - ஐம்பூதங்கள் அல்லது ஐந்து தன் மாத்திரைகள், ஆறு -ஆறுசமயங்கள் அல்லது அத்துவாக்கள், ஏழுஉம்பர்ச் சென்றனன் - ஏழுலகத்துக்கு அப்பாற்பட்டவன், எட்டு - எண்குணம்: மேற்சொன்ன ஏழுநிலைகளையுங் கடந்து எட்டாவது நிலை. அப்பாலுக் கப்பாலான துரியாதீதநிலை. சிற் பரங்கடந்த தற்பரநிலை.

தேடித் தேடிப் பார்த்தும் சிவனோடு ஒக்கும் தெய்வம் இல்லை. அவனுக்கிணையானவர் யாவரும் இல்லை. அவனன்றி அமரரும் இல்லை. அவனன்றிச் செய்யும் அருந்தவமில்லை. அயன் அரி அரன் ஆகிய முத்தொழிலாருக்கும் அவனன்றி யாதும் இயலாது. இம்மூவருக்கும் மூத்தவன் தன்னை, அப்பா! என்று அன்புடன் அழைப்பவருக்கு அப்பனாய்ப் பாதுகாப்பவன், மாசற்ற பொன் போன்றவன் என்றெல்லாம் இறைவனியல்பு கூறுகின்றார். பின் வேதாகமச் சிறப்புகள் கூறி குருபாரம் பரியம், தன்வரலாறு குருமடவரலாறு முதலியன சொல்கின்றார்.

முதல் தந்திரத்தில் ஞானநெறிக்கு அடிப்படையாகிய ஒழுக்கநெறி குறிப்பிடப்படுகின்றது. கொல்லாமை, புலால் மறுத்தல், பிறர்மனை நயவாமை, யாக்கை, உயிர், இளமை நிலை யாமை, அந்தணர் ஒழுக்கம் அன்புடைமை கல்வி கல்லாமை, நடுவு நிலைமை, கள்ளுண்ணாமை இன்னும்பல கூறப்படுகின்றன. முதல்தந்திரம் காரணாகமத்தின் சாரம் என்று சொல்லப்படு கிறது. திருவள்ளுவர் திருக்குறள் அறத்துப்பாலை ஒப்பிடுக. இரண்டாம் தந்திரம் காமிக ஆகமத்தின் சாரம் என்பார்கள். புராண இதிகாசக்கதைகளின் நுண்பொருள்கள் விளக்கி கடவுளின் ஐந்தொழில், ஆன்மாக்கள் கூறு கடவுளை வழிபட்டு உய்யும் வழியினிடத்து உண்டாகும் வழுஉக்கள் சொல்லப் படுகின்றன. தாயின் வயிற்றிலே கருத்தரித்துப் பத்துமாதங்க ளாய் வளர்கின்றதை விளக்கப்படுகிறது. வயிற்றிலிருப்பது ஆணா பெண்ணா என்பதும் குழந்தைகள் பலபல நிலைகளில் எப்படிப் பிறக்கின்றன என்பதும் அழகாக உரைக்கப்படு

கின்றன. டாக்டர்கள் இதை நன்ருய் ஆராய்ச்சி செய்ய வேண்டும். மூன்ருந் தந்திரத்தில் யோகத்தின் வழிகள் சித்திகள் முதலியன கூறுப்படுகின்றன. இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம், பிரத்தியாகரம், தாரணே தியானம் சமாதி, அட்டமாசித்தி வாரசூலம் முதலியன.

நான்காந்தந்திரம் சிந்தியாகமத்தின் சாரமென்பர். மந்திர யோகத்தின் பிரிவுகள், உபாசனே வேற்றுமைகளே விளம்பும். திருஅம்பலச் சக்கரம், திரிபுரைச்சக்கரம் பைரவி சக்கரம் முதலிய சக்கரங்கள் கீறும் முறை அடைக்கும் எழுத்துக்கள் முதலியன விரித்துரைக்கப்படுகின்றன. இத்தந்திரப்பாக்கள் பல அந்தாதித் தொடையில் அமைந்திருக்கின்றன.

ஐந்தாந்தந்திரம் சைவ சமயப்பகுதிகள் நான்கு பாதங்கள் (சரியை கிரியை யோகம் ஞானம்) தாச, சற்புத்திர, சக, சன் மார்க்கங்கள் இவைகளின் இறுதி நிலேகள் கூறும். வாதுளாகமத்தின் சாரம் என்பார்கள்.

ஆருந்தந்திரம் வியாமளாகமத்தின் சாரமெனப்படும். துறவு, தவம், திருநீறு, சிவகுரு தரிசனம், திருவடிப்பேறு சிவ வேடம் முதலியன கூறும்.

ஏழாந்தந்திரம் ஆருதாரம், அவைகளில் ஒளிரும் கடவுளின் கூத்து, சிவபூசை, குருபூசை, மகேஸ்வரபூசை போசனவிதி பிட்சாவிதி யோகப்பயிற்சியைக் கைப்பற்றுமிடத்து இன்றியமையாச் சீரொழுக்கங்கள் பேசும். இது காலோத்தராகமத்தின் சாரமாகும்.

எட்டாந்தந்திரம் சுப்பிரபேதாகமத்தின் சாரம் என்பர். ஆறுஅத்துவாக்கள் அவத்தைபேதம் பரலட்சணம் முத்துரியம் மும்முத்தி முச்சொருபம் முக்கரணம் முப்பாழ் வாய்மை அவா வறுத்தல் பத்தியுடைமை முத்தியுடைமை இயம்பும். கடைசி ஒன்பதாந் தந்திரம் மகுடாகமத்தின் சாரமென்பர். பஞ்சாக்கர வகைகள் திருக்கூத்து தரிசனம் ஊழ் சிவதரிசனம் சூனிய சம்பாஷணே, மோனசமாதி, தோத்திரம் முதலியன இதில் அடங்கும்: (தொடக்கத்திற் கூறிய பாட்டு சூனிய சம்பாஷணேயி

லுள்ளது.) ஆகவே திருமந்திரம் ஓர் உயரிய நீதிநூலாயும் சமய சாஸ்திர நூலாயும் தோத்திர நூலாயும் திகழ்கின்றது. சமயத் துறையில் சைவசித்தாந்தத் தத்துவக் கருத்துக்கள் விளக்கப் படுகின்றன. யோகம் பயில்வார்க்கு ஓர் யோகநூல். இவ்வளவு பெருமை யுடைத்ததெனினும் இந்நூல் இலக்கிய உலகில் நல்ல இடம்பெறவில்லை. இலக்கிய உலகினும் முன்னணியில் நிற் கின்றதென்பதை யாவரும் மறுக்கமுடியாது. திருவள்ளுவர் ஓர் ஒப்பற்ற உலகப்புலவர். அறம் பொருள் இன்பம் முப்பாலை மிக விரிவாயும் வீட்டுப்பாலை குறிப்பாயும் ஓதி நீதிநெறி மூலம் நன்னெறியாகிய திருநெறிக்கு வழிகாட்டிய பெருஞானி. திரு மூலர் எல்லாவற்றையும் சமயக்கண் கொண்டே பார்க்கின்றார். இவர் நூலின் அடிப்படை சமயம். வள்ளுவர் நூலின் அடிப் படை நீதி. அறம் (தர்மமென்ற பொருளல்ல) இருபுலவர்களுக் கும் ஒற்றுமையும் வேறுபாடுகளும் உண்டு. திருவள்ளுவர் கூறாத பொருள்களை யெல்லாம் திருமூலர் கூறியிருக்கின்றார். திருவள்ளுவர் இல்லறத்தில் வாழ்ந்த ஞானத்துறவி. திருமூலர் துறவறத்தில் நின்ற ஞானயோகி. எனினும் இல்லற இயல்பு களை அறியாதவர் அல்ல.

திருக்குறள் எல்லா மக்களுக்கும் பொது நூலாக அமைந் திருக்கின்றது. திருமந்திரம் சமய உலகத்தில் சிறப்படை கின்றது. நிற்க. திருமந்திரப் பாக்கள் சிலவற்றைப் பார்ப் போம். திருவும் குலமும் குணமும் ஒத்த கணவனும் மனைவியும் அன்புடன்இன்பமாகஇல்லறம்நடத்துகின்றனர். ஒருநாள்மனைவி பிரியமாகத்தன் கணவனுக்கு அடைசெய்து வைத்தாள். கணவன் பிரியமாய்த் தின்றான். மனைவியும் உண்டாள். பின் பள்ளியறை சென்றனர். இன்பம் கலந்தனர். கணவன் இடப்பக்கம் வலிக் கிறதென்றார். படுத்தார் இறந்தே போனார். "கிடந்து ஒழிந் தார்". மீளாவண்ணம் மாண்டார். (கிருதயம் திடீரென்று நின்று விட்டது Heart Failure) முந்திய நிமிடம் இருந்தவர் அடுத்த நிமிடம் இல்லை. என்னே யாக்கையின் நிலையாமை! என்று சொல்கிறார் திருமூலர்.

" அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக் கொடியா ரொடுமந்தணங் கொண்டார்

இடப்பக்கமே யிறைநொந்தது என்ருர்
கிடக்கப்படுத்தார் கிடந் தொழிந்தாரே "

வள்ளுவப் பெருமானும் யாக்கை நிலையாமையை

" நெருநல் உளன்ஒருவன் இன்றில்லையென்னும்
பெருமை யுடைத் திவ்வுலகு "

என்ருர். நேற்றிருந்தவன் இன்றில்லை என்ருர் வள்ளுவர். மூலர் அவரையும் விஞ்சி முற்கணமிருந்தவர் அடுத்தகணமில்லை யென்கின்ருர். இலக்கியக் கண் கொண்டு காண்பார்க்குத் திருமந்திரம் தென்றல் மணங்கமழும் பூஞ்சோலையாகத் தோன்றும்.

ஆண் பெண் கூடி மகப்பேறெய்துகின்றனர். துன்புறும் பாசத்தில் மகவு தோன்றி வளர்கிறது. குயில் முட்டையைக் காக்கை அடைகாத்து குஞ்சாக்கி வளர்ப்பதுபோல் ஒரு பாச மயக்கத்தால் பெற்ருேர் பிள்ளையை உயிரெனப் போற்றி வளர்க்கின்றனர். இப்பாசத்தின் காரணம் யாராலும் சொல்லமுடியாது. கர்ப்பதானம் செய்த தந்தை அறியான். அதை ஏற்ற தாய் அறியாள். கருவை உருவாக்கிய தட்டான் அறிவான். ஆனல் சொல்லமாட்டான். அனைத்திற்கும் சாக்ஷியாய் இறைவன் அங்கே இருக்கிருன்.

" இட்டான் அறிந்திலன் ஏற்றவள் கண்டிலள்
தட்டான் அறிந்தும் ஒருவர்க் குரைத்திலன்
பட்டாங்கு சொல்லும் பரமனும் அங்குளன்
கெட்டேன் இம்மாயையின் கீழ்மை எவ்வாறே."

" குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக் கூட்டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கி ன்றதுபோல்
இயக்கில்லைப் போக்கில்லை யேனென்ப தில்லை
மயக்கத்தால் காக்கை வளர்க்கின்ற வாறே."

என்ன அழகான பாட்டுகள்! இலக்கியச் சுவை அப்படியே ததும்பிவழிகின்றது. இறைவனுக்குத் தட்டான் என்ற பெயர் கொடுத்த நயந்தான் என்ன? பிரமன் என்றுஞ் சொல்லலாம்.

மலையிலிருந்து அருவி விழுகின்றது. அருவியில் நீராட நாம் எண்ணங்கொள்வோம். விவசாயி பக்கத்திலுள்ள குளத்தை நிரப்ப அருவி நீரைப் பயன் படுத்தக் கருதுவான். பொறிஇயல்

அறிவாளி மின் சக்தி உண்டாக்க யோசனை செய்வான். ஆனால் கடவுள் சிந்தனையுள்ள ஞானி அருவியும் அதன் நீரோட்டமும் இறைவன் கருணைவெள்ளம் போலிருக்கிறதென்று எண்ணுவான். எல்லாம் நாம் பார்க்கும் பார்வையில் இருக்கின்றது (Angle of vision). உலகத்தை நாம் பார்க்கின்றோம். நமக்குத் தெரிவது கீழே பூமி மேலே வானம். ஒரு உயர்ந்த வீட்டுக்கூரை மேல் நின்று பார்க்க, வானம் பந்தல் போலத் தோன்றும். ஒரு பெரிய மலைமேல் நின்று பார்க்க,வானம் குவிந்து விளிம்பு தரையைத் தொடுகின்றதென்று தெரிகிறது. தரையைத் தொடுவதுடன் உள்ளேயும் போகின்றது போல் காட்சியளிக்கிறது.

அப்போது வானம் ஒரு அரைவட்டத்தொப்பி போலிருக்கிறது. இதை Horizon என்கிறோம். நமக்குத் தெரிவதும் நாம் அறிவதும் அவ்வளவுதான். திருமூலரும் இதைப்பார்த்தார். அவர் கண்ணோக்கு வேறே. பூமியாகிய ஆவுடையார் மேல் வானுகிற லிங்கமல்லவா இருக்கின்ற தென்றுகண்டார். அண்டலிங்கம். என்ன ஆச்சரியம்! அபிஷேகம் எங்கே, ஆடை எங்கே, அணிகலன்கள் எங்கே? என்று சிந்தித்தார்.

சிவபூஜையுடையவர்கள் வீட்டில் ஸ்படிகலிங்கம் ஒரு இஞ்ச் உயரமிருக்கும். இரண்டு மூன்று கறண்டி நீர்கொண்டு அபிடேகித்து 2, 3 மலர்களால் அர்ச்சித்து பூஜை முடிப்பார்கள். இப்போது வீட்டிலிருந்து திருக்குற்றாலதலம் போய் வணங்குவோம். குறுகிய குற்றாலநாதருக்கு ஒருகுடம் தண்ணீர் அபிடேகம் நான்கு முழப் பரிவட்டம். திருமேனியில் ஒருமாலை. திருமுடியில் இண்டைமாலை. வீட்டு லிங்கத்தைவிடக் குற்றாலலிங்கர் பெரியவர். இவரை வணங்கியபின் தஞ்சை சென்று பிரகதீஸ்வரரைத் தரிசிப்போம். மூர்த்தி மிகப் பெரியவர். படியேறி அபிடேகிக்க வேண்டும். அபிடேக நீருக்காகவே ஓர் குளம் வெட்டப்பட்டிருக்கிறது. மலர்கள் கூடை கூடையாக வேண்டும். குற்றாலநாதரைவிட பிரகதீஸ்வரர் பெரிய மூர்த்தியல்லவா? ஆனால் அண்டலிங்கத்திற்கு எப்படி? அபிடேக நீர் எடுக்கக் கிணறு குளம் ஆறு போதாது. இவருக்கு வேண்டிய நீர் அளிப்பது கடல். யார்? எப்படி? அபிஷேகம் செய்வது? கருமேகங்கள் அந்நீரைமொண்டு மழையாகப் பெய்து அபிடேகிக்

கிறது. ஆடைக்கென் செய்வது? மழைக்குப் பின் வானில் தோன்றும் வெண் மேகங்கள் பரிவட்டமாம். மாலை? வானவெளியில் கண் சிமிட்டி மின்னிக் கொண்டிருக்கும் நட்க்ஷத்திரக்கூட்டங்களாலாகிய வெண்மாலை. என்ன கற்பனை? என்ன உயரம்! என்ன ஆழம்! அருட் கண் கொண்டல்லவா பார்க்கின்றார்.

" அருட் கண்ணிலாதார்க் கரும்பொருள் தோன்று
அருட் கண்ணுளோர்க்கு எதிர்தோன்றும் அரனே
இருட் கண்ணினோர்க் கங்கிரவி யும்தோன்றுத்
தெருட் கண்ணினோர்க் கெங்குஞ் சீரொளியாமே"

என்றல்லவா சொல்கின்றார்.

" ஆரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை
யாரறிவார் இந்த அகலமும் நீளமும்"

என்று வியந்து அண்டலிங்கத்தைப் போற்றுகின்றார்.

" தரையுற்ற சத்திதனிலிங்கம் விண்ணும்
திரைபொரு நீரது மஞ்சனசாலை
வரைதவழ் மஞ்சுநீர் வானுகுமாலை
கரையற்ற நந்தி கலையுந்திக் காமே"

தரை - ஆதாரமாகிய இடம். லிங்கம்விண் - சொரூபம் - பரமாகாயம் கரையற்றநந்தி - எல்லையற்றுப் பிரபஞ்சங் கடந்த சிவம்.

இறைவன் அடியார் வடிவில் நடமாடுகின்றான். கோயில் நிவேதனத்தைவிட அடியார்க்கு அன்னமளித்தல்சிறப்புடையது.

" படமாடும் கோயில் பகவற் கொன்றீயில்
நடமாடும் கோயில் நம்பர்க்கங்காகா
நடமாடும் கோயில் நம்பர்க் கொன்றீயில்
படமாடும் கோயில் பகவற்காமே"

என்று உபதேசிக்கிறார்.

கோயிற் பூசை ஒழுங்காய் நடக்காவிடில்

" முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரிவளங் குன்றும்
கன்னங்களவு மிகுத்திடும்"

என்றும் "வேந்தற்குப் பொல்லா வியாதியாம் – நாட்டுக்குப் பஞ்சமுமாம்" என்று எச்சரிக்கின்றார்.

யாவருஞ் செய்யக் கூடியதென்ன ?

"யாவர்க்குமாம் இறைவற் கொருபச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கு ஒருவாயுறை
யாவர்க்குமாம் உண்ணும்போது ஒருகைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரைதானே"

என்று எளிய வழிகளைக் காட்டியிருக்கின்றார்.

அன்பின்றி அறமில்லை அருளில்லை இன்பமில்லை. அன்பில் உருகியே மாணிக்கவாசகர் சிவமயமானார். அன்பின் தீவிரத் தால் சிவம் வாய்க்கும். அன்பே சிவமாகும் என்பர் அறிஞர். வேறு என்பர் அறியாதவர். அன்பே இன்பச் சிவமாகும், சிவன் அன்புமயமானவன். "என்னுடை அன்பே" என்று மணி வாசகர் அன்புவடிவினனாகிய சிவனை அழைக்கின்றார்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவதாரும் அறிகிலார்
அன்பே சிவமாவதாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே"

என்று ஓர் உயர்ந்த தத்துவம் போதிக்கின்றார்.

திருமந்திரம் அரிய இலக்கியமாகவும் உலகுக்கு ஓர் சைவ நெறியாகிய அன்பு நெறியைப் போதிக்கும் சமய சாத்திரமாக வும் விளங்குமென்பது இதுவரை கூறியதால் தெரிந்து கொள்ள லாம். அறிவின் சிகரம். அன்பின் எல்லை. தத்துவங்களின்முடிவு.

---

# அப்பர் தேவாரத்தினின்றும் அறியப்படுவன

[ஏழாம் நூற்றுண்டில் தமிழ்நாட்டு நிலை]

**திரு. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள்,**

சென்னை.

I. கடவுளர் :—

1. கணபதி :— இவர் ஆனைமுகன், கண்பதி, விக்கின விநாயகன் என்னும் பெயர்களாற் கூறப்பட்டுள்ளார். இவர் கஜாமுகாசுரனை அடக்கினவர் என்பதும், அடியவர்களுடைய இடர்களை நீக்கி அருளுவர் என்பதும் தெரிகின்றன.

2. முருகவேள் :— இவர் சிவபிரானுடைய திருமகனர் என்பதும், இவருக்குத் திருமுகங்கள் ஆறு, கண் - பன்னிரண்டு, படை - வேல், கொடி - கோழி, ஊர்தி - மயில் என்பதும், இவர் சூரனைக் கடலில் அட்டனர் என்பதும், குறத்தி வள்ளியை மணந்தனர் என்பதும், திருச்செந்தூரில் வீற்றிருப்பவர் என்பதும் தெரிகின்றன. கடம்பன், குமரன், சரவணத்தான், வள்ளி மணாளன், செல்வக் குமரவேள், வேலன், மயிலூர்தி என்னும் திருநாமங்களாற் குறிப்பிடப்பட்டுள்ளார்.

3. பார்வதி :— அருந்தவத்தாள், காமக்கோட்டி, பார்ப்பதி ஏழை, பேதை, பெண்ணினல்லாள், பொருப்பரையன் மடப்பாவை — முதலிய பேர்களாற் குறிக்கப்பட்டுள்ளாள்; திருமாலே தேவி என்பதும், தேவி - தாருகனைச் சங்கரித்தாள் என்பதும், முருகவேளின் தாய் என்பதும், தேவியின் தவத்துக்கு மகிழ்ந்து சிவபிரான் தமது உடலில் ஒரு பாகத்தைத் தேவிக்கு அருளினர் என்பதும், எழுதலாகாத அழகு வாய்ந்தவள் தேவி என்பதும் சொல்லப்பட்டுள.

4. சிவபிரான் :— இவரே எல்லா உயிர்க்கும் இறை என்பதும், மூவர் முதலாய மூர்த்தி என்பதும், நிலம் - நீர் - தீ - காற்று - ஆகாயம் - திங்கள் - ஞாயிறு - ஆன்மாஎன்னும் எட்டுமாய் - அட்ட மூர்த்தியாய் விளங்குபவர் என்பதும், உணர்தற்கு

அரியவர், காட்சிக்கு அரியவர் என்பதும், நமது உள்ளத்தில் அவர் இருந்த போதிலும் நமக்குள்ளே அவர் கள்ளத்தனமாய் நிற்கின்றுர் என்பதும் சிவனே பாத்திரம் என்று நாம் அவரைப் பணிந்தால் ஒரு மாத்திரைப் பொழுதில் அவர் நமக்கு அருள் புரிவார் என்பதும் விளக்கப்பட்டுள. -

5. திருமால் :- வராகவதாரம், நரசிம்மாவதாரம், வாமனு வதாரம், ராமாவதாரம், கிருஷ்ணுவதாரம், இவை சம்பந்தமான விவரங்களும், திருமாலின் ஆடல்-குடக்கூத்து என்பதும், திருமாலுக்கு உரியநாள் திருஓணம் என்பதும், திருமால் திருநீறுபூசுவர் என்பதும், அவர் சிவபெருமானைப் பூசித்துச் சக்கரம் பெற்றனர் என்பதும்,அவர் வக்ரனை அட்டதும்,அவரைத் தேவகணங்களும், சகல தேசங்களும் தொழுது ஏத்தும் என்பதும் தெரிகின்றன.

6. பிற தேவர்கள் – தேவதைகள் முதலானேர் :- பிரமன், ருத்ர மூர்த்தி பைரவர் இந்திரன், ஏகாதசருத்திரர்,குபேரன், வசுக்கள், சூரியன், சந்திரன், அக்கினி, சாத்தன், நந்தி, தண்டி, சுந்தரன், குண்டோதரன், சங்குகன்னன், நிருதி, புதன், காமன், காலன், மாகாளர், வருணன், வாயு, வியாத்திரன், இலக்குமி, சாமுண்டி, காளி, விரி, ரதி, பூமி தேவி, இயக்கர், கந்தருவர், கின்னரர், விச்சாதரர், சித்தர், முதலானேர் கூறப்பட்டுளர்.

2. அடியார்கள் :- மெய்யன்புள்ள அடியார் பலர் இருந்தனர்; அவர் பக்தி மேலிட்டால் அகங்குழைந்து அழுவர்; வாயாரப் பாடுவர்; பேயர்போல் இருப்பர்; திருநீறு அணிவர்; சிலம்பணிந்து கூத்தாடுவர்; சிவனே எமது பிரான் என்பர்; நகம் தேய மலர் பறித்துப் பூசித்துக் கண்ணீர் மல்கப் பணிவர்; திருநீறு முதலிய சிவசின்னங்களைக்கண்டால், கண்ட போதே வேறு சிந்தனையின்றித் தொழுது வணங்குவர்; "சிவாய நம" என ஓதித் துன்பக்கடலை நீந்திக் கரை ஏறுவர்;

அவர் செய்த தொண்டு வகைகள் :- பாடுதல், பல்லாண்டிசைத்தல், திரு நாமங்களை ஓதுதல், இசைக் கருவிகளை முழக்குதல், மறை கலந்த மந்திரங்களை ஓதுதல், நீர் கொண்டு வழிபடுதல், மலரிட்டுப் பூசித்தல், எருக்கு, குவளை இவை கொண்டு மாலை கட்டிப்புனைந்து ஏத்துதல், தூபதீபம் சாந்தம் முதலியதருதல்.

3. மொழி :- ஆரியமும் தமிழும் சிவபிராற்கு உகந்தவை; சிவனே ஆரியன் - சிவனே தமிழன் ; அவரே வட மொழியும், தென் தமிழும் நான் மறையும் ஆவர்; உண்மைப் பொருளைக் குறிக்கும் பெருமை பொருந்தியது தமிழ்.

4. இசையும் பண்ணும் :- இசைகளுள் - இருக்குவேத இசையும் ஏழிசையும், சாமவேத கீதமும் பண்களுள் காந்தாரமும் (சீ)காமரமும், செவ்வழியும், பஞ்சமமும், வண்டின் பண்ணும்; வாத்திய இசைகளிற் கின்னரம், குழல், வீணை, யாழ், பாலை யாழ் - இசைகளும் கூறப்பட்டுள.

* பண் செவ்வழி [யதுகுல காம்போதி] பாடி மாலைவேளையில் வானவர் ஈசனை வழிபடுவர்.

5. வாத்தியங்கள் :- உடுக்கை, கல்லலகு, கல்லவடம், கின்னரம், குடமுழவம், குழல், கொக்கரை, கொடு கொட்டி, சங்கம், சச்சரி, தக்கை, தகுணிச்சம், தமருகம், தாளம், துடி, பறண்டை, பறை, பிடவம், முரசம், முழவு, மொந்தை, யாழ், வீணை, ஆக 23 வாத்தியங்கள் சொல்லப்பட்டுள.

6. அரசர் போர் :- பொதுவாக - சோழ அரசர், முடி அரசர், நாவலந்தீ அரசர் கூறப்பட்டுளர். தலையாலங் காட்டுப் போர் நிகழ்ச்சி குறிக்கப்பட்டுள்ளது.

இமயமலை அரசன், காகுத்தன் (ஸ்ரீ ராமர்), கோச் செங்கட் சோழன், சகரர்கள், தசரதன், பகீரதன், மாவலி சொல்லப் பட்டுளர்.

7. ஆறுகள் – தீர்த்தங்கள் :- அரிசிலாறு, கடுவாய் (குட முருட்டி), காவிரி, குமரி, கெடிலம், கொட்டாறு, பெண்ணை, மண்ணி, வைகை, கொள்ளிடம். வெண்ணி (பாமணிநதி)-கங்கை கோமதி, சரஸ்வதி, சாமி, யமுனை, கோதாவிரி கூறப்பட்டுள.

---

* *பண் செவ்வழி - மாலைப் பொழுதுக்கு உரியது.*

"பாலையா ழொடு செவ்வழி பண்கொள, மாலை
வானவர் வந்து வழிபடும்" —*அப்பர் 5-12-10*

"இருள் வரச் — செவ்வழி பண்ணி" —*புறநானூறு-144*

8. நகைகள் :- அரைஞாண், ஆரம், கங்கணம், கழல், காஞ்சி, கிண்கிணி, குண்டலம், குழை, சிலம்பு, தோடு, தோள் வளை, பட்டம், பாடகம், மேகலை - எனப்படும் நகைகள் சொல்லப் பட்டுள.

9. நாகரிகநிலை :- (i) வேதாரணியம் கடற்கரையிற் கப் பல்கள் உலவின. (ii) புல்லாங்குழல் செய்பவர்கள், வாசிப்ப வர்கள் திருவிழி மிழலையில் இருந்தனர். (iii) பண் பொருந்தப் பயின்று பாடுபவர்கள். திருக் கோளிலி என்னும் தலத்தில் இருந்தார்கள்; (iv) செல்வத்துக்கு அறிகுறியாக விளங்கினவை: கொடி, விதானம், கவரி, பறை, கைவிளக்கு, சங்கம். (v) செருப் புக்கள் தோலாற் செய்யப்பட்டன.

10. வழங்கின பழமொழிகளும், நீதி வாக்கியங்களும்:-

(i) பழமொழிகள் :-

1. அறம் இருக்க மறத்தை விலைக்குக் கொள்வது.
2. அறு கயிறூசல் போல.
3. ஆற்றிலே கெடுத்துக் குளத்திலே தேடுதல்.
4. இருட்டறையில் மலட்டு மாட்டைக் கறத்தல்.
5. இருதலைக் கொள்ளியின் இடையகப்பட்ட எறும்பு போல.
6. இன்றுளார் நாளையில்லை.
7. உலைநீர் ஆமை போல.
8. உற்றலால் கயவர் தேருர்.
9. கரும்பிருக்க இரும்பு கடித்து எய்த்தல்.
10. கழியிடைத் தோணி போல.
11. கனி இருக்கக் காய் கவர்தல்.
12. காம்பிலா மூழை (அகப்பை) போல.
13. கூவல் ஆமை குரை கடல் ஆமையைக் கூவலோ டொக்குமோ கடல் என்றல் போல்;
14. கையில் உள்ள நெல்லிக்கனி போல.
15. கொத்தைக்கு (குருடர்க்கு) மூங்கை வழி காட்டுதல்.
16. தவம் இருக்க அவம் செய்தல்.
17. தழலை (நெருப்பை) மடியில் கொள்ளுதல்.
18. நரிவரால் கவ்வச் சென்று நற்றசை இழந்தது போல.

19. நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந் தோர்கட்கே.
20. பனிநீரால் பாவை செய்யப் பாவித்தல்.
21. பாம்பின் வாய்த் தேரை போல.
22. பாழுக்கே நீர் இறைத்து.
23. மத்துறு தயிரே போல.
24. மன்றத்துப் புன்னை போல்.
25. முயல்விட்டுக் காக்கைப் பின் போனவாறே.
26. மோத்தையை (மாமிசத்தை)க்கண்ட காக்கை போல.
27. விளக்கத்திற் கோழி போல.
28. விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்தவாறே.

இவையன்றி நீதி உண்மைகளும் கூறப்பட்டுள. உதாரணமாக :-

1. நமன் நரகர்க்கு சிவன் நமக்கு.
2. என்னில் யாரும் எனக் கினியாரிலை.
3. ஈசன் எங்கும் உளன் என்னும் உணர்ச்சி யிலாதவர் கங்கை, காவிரி, குமரிதீர்த்தம், கடல், இவைகளில் மூழ்குவதால் ஒருநற்பயனையும் பெறார்.
4. முடிக்க வேண்டும் என்னும் முயற்சி இருந்தால் முடியாதது ஒன்றும் இல்லை.
5. தம்மை அடைந்தவரின் வினையைத் தீர்ப்பதுதான் பெரியோர் கடமை.

11. பழக்க வழக்கங்கள் :-

1. இறந்தபின் செய்யப்படுவது :-

உயிர் பிரிந்தபின் பிணத்தின் கை, காலைக்கட்டி, மையினால் கண் எழுதி, மாலை சூட்டிச் சுடுகாட்டிற் பிணத்தைச் சேர்த்து விறகு கொண்டு தீ மூட்டுவர்.

2. கழனிகளின் நிலை :– கழனிகளில் நீர் நிறைந்திருக்கும்; அதில் இருல்,மலங்கு, வாளை, கயல், சேல், வரால், களிறு ஆதிய மீன் வகைகள் பொலியும்; பெரிய செந்நெல், பிரம்புரி கெந்தசாலி திப்பியம் ஆகிய நெல் வகைகள் விளையும்.

3. குலம் கோத்திரம் :– இவை கதிதரா; சிவனைப் பணிய நற்கதி பெறலாம்.

4.

4. ஊர்கள் :- பெரிய ஊர்களில் மாடங்களிலும் மாளிகை களிலும் மிகஉயரமான கொடிகள் பறக்கும்; காலையிற் சங்கொலி கேட்கும்.

5. சுத்தி :- பரிசுத்தம் செய்யத் தலையில் பால் தெளிக்கப் படும். குளித்தல், முழுகுதல், தீர்த்தத்தைத் தலையில் தெளித்துக் கொள்ளுதல்—ஆகிய பழக்கம் வழங்கி வந்தது.

6. வழிபாடு :- நெருப்பிற் குங்குலியப் புகை காட்டி ஆல யங்களில் வாழிபாடு நடைபெற்றது.

7. திருநீறு :- நோய் தீர வெண்ணீறு அணிவர்.

12. மக்கள் வகை :- மக்களுள் இறைவன் திருவருளைப் பெற்று நின்றவர், உண்மை தங்கும் பெருநிலைக் குறி யினர், உத்தமர் எண்ணும் எழுத்தும், குறியும் அறிபவர், நற்பதத்தர், மனிதரில் தலையாய மனிதர்- ஆகிய நற்பண்புடைய மக்கள் வாழ்ந்தனர். அறம் புரியாத துரிசர்கள், உயர்கதிக்கு வழி தேடிப் போகாதவர்கள் உள்ளத்திற் கொடுமை நீங்காத வர்கள், கல் மனத்தினர்கள், சாத்திரம் பேசும் சழக்கர்கள், தீவினையாளர், நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலிகள், பாவகாரிகள் மட்டுண்பார்கள், மடந்தையர் வாட் கண்ணால் கட்டுண்டவர்கள், வஞ்சமனத்தவர், - வாது செய்து மயங்கு மனத்தினர்,-என நற் பண்பிலாத மக்களும் வாழ்ந்திருந்தனர்.

13. மரம், செடி, கொடி வகைகளில் :- அடும்பு, ஆத்தி, ஆல் எருக்கு, கமுகு, கரும்பு, கழுநீர், கள்ளி, காந்தள்,குரா, கூவிளம் (வில்வம்) கொன்றை,கோங்கம், தாமரை, தாழை,தெங்கு, நாவல் நிலம், நெய்தல், புன்னை, மத்தம், மல்லிகை சொல்லப்பட்டுள.

14. மறையோர் :- இருக்கு ஆதிய வேதம் ஓதித் திருக் கோயிலில் வழிபட்டனர். காலையிலும், மாலையிலும் பசு நெய் கொண்டு, எரி, உருவராம் சிவனை எரி ஓம்பிப்போற்றுவர்; அளவிற் குறையாத அவி உணவை ஆக்கினர்; அதனால் கலி அஞ்சி விலகி நின்றது; உலகுக் கெல்லாம் மங்கலப் பொலிவைத் தரும் அந்தணர்கள் தில்லையில் (சிதம்பரத்தில்) வாழ்ந்தனர்; நால் வேதமும், அங்கமும், கலைகளும் பயின்று உலகு புகழ் உயர் புகழ்வாய்ந்த அந்தணர்கள் ஓமாம்புலியூர் என்னும் தலத்தில்

விளங்கினர்; செல்வமல்கு சிவ நியமத்தரான சிறப்புற்ற மறை யோர் திருமங்கலக் குடியில் வாழ்ந்தனர். பிரமனுக்கு ஒப்பான அந்தணர்கள் திருப்பாதிரிப்புலியூரில் வாழ்ந்தனர்.

15. மாதர்கள் :– இவர்கள் கண்ணுக்கு மையிட்டுக் கொள் ளுதல் கொங்கையிற் சந்தனம் அணிதல், விலை மிக்க மாலைகளைப் பூணுதல், "மாமருதா" என்று தலைவியும் தோழியர் கூட்டமும் இறைவன் திருநாமங்களைப் பயிலுதல், ஆலய வழிபாடு செய்தல், திருக்கோயிலை வலம் வந்து இறைவன் முன்னிலையில் நடனம் ஆடுதல், காவிரி நீரில் மூழ்கி இறைவனைப் போற்றிப் பாடுதல்– கூறப்பட்டுள. காளையர்களுடன் இனிமையாய்ப் பேசி அவர்களை ஏமாற்றும் வேசையர்களும் இருந்தனர்.

16. விழாக்கள் :– அட்டமி முன் ஏழு நாள், ஆதிரை நாள், பங்குனி உத்திரநாள், தேர்விழா கூறப்பட்டுள. கொடியேற்றத் துடன் திருவிழா நடைபெறும். திருவிழாக்களில் மணிப் பொற் கவரி வீசுதல், வீதிகள் தோறும் வெண் கொடிகளைப் பறக்க விடுதல், சுடர்மணித் தீபங்களை ஒளி வீச வைத்தல், பவளமாலை, முத்துமாலை வரிசைகளையும் முத்து விதானங்களையும் விளங்க வைத்து அலங்கரித்தல் - ஆகிய வழக்கங்கள் இருந்தன. திரு விழாக் கூட்டத்தில் மூப்பு அணுகாதவர் முன்செல்வர், மங்கை யர்கள் பின் செல்வர்; திருநீறிட்டுப் பாடும் தொண்டர் கூட்டம் புடை சூழும்; பக்தர்கள் முத்து விதானங்களை ஏந்துவர்; மங்கையர் மணிப் பொற் கவரிகளை வீசுவர், ஆடல் பாடல் ஒரு பால் நிகழும், பரவசப்பட்டுத் தமது நிலை அழிந்தவர் ஒருபால்; பத்தி மேலீட்டால் விம்மி விம்மி அழுபவர் ஒருபால்; இறைவன் சேவடியையே சிந்திக்கும் மாதர் கூட்டம் ஒருபால் வரப் பெரியோர்கள், விரதிகள், அந்தணர் சைவர், பாசுபதர், கபாலிகர் கூட்டத்துடன் திருவிழாக்கள் பொலியும்; விழாக்களில் கல்ல வடம்,வெண்சங்கு பறை இவைகளின் பேரொலி நிறைந்திருக்கும். ஆனைகளின் மேல் முரசவாத்தியம் முற்படும். திருவாரூரில் திரு ஆதிரை விழா பங்குனி உத்திர விழா; திருஒற்றியூரில் – உத்திர நாள் தீர்த்த விழா, கச்சியிலும், கோளிலியிலும் எப்போதும் திரு விழாவின் பேரொலி, திருக்குறுக்கையில் அட்டமிமுன் ஏழுநாளும் கூத்தப்பிரான் திருவுலாப் போதல், திருக்கோடிக்காவில் ஒய்வின்றித்

திரு விழாக்கள் நடைபெறுதல்; திருப்புத்தூரிலும் திருப்பைஞ்ஞீலி யிலும் தேர்விழா நடைபெறுதல், திருமறைக்காட்டில் (வேதாரணியத் தில்) செல்வமலி திருவிழா நடைபெறுதல் – கூறப்பட்டுள.

17. வேள்விகள் :– அந்தணர் வேள்வியின் புகை போய் மேகமாய் மழைபொழியும்.

18. ஜீவராசிகள் :—

(i) ஊர்வன :– சிலந்தி, எறும்பு, பாம்பு, புழு.

(ii) நீர்வாழ்வன :– ஆமை, தவளை, தேரை, நண்டு, மீன்கள் (இருல், கயல், களிறு, கெண்டை, கொய், சுரு, சேல், மலங்கு வரால், வாளை.)

(iii) பறவைகள் :– அன்னம், கருடன், கழுகு, காக்கை கிளி கின்னரம், குயில், குருகு, கொக்கு, கொதுகு, கோழி, நாரை, பகன்றில் பருந்து, புரு, பூவை, மயில் வண்டு.

(iv) விலங்குகள் :– பசு, எருது, பன்றி, நரி, குதிரை, குரங்கு மந்தி, நாய், யானை, மான், முயல், எருமை – கூறப்பட்டுள.



# ஏரகம் என்பது சாமிமலையா?

திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள்,
அண்ணுமலைப்பல்கலைக்கழகம்.



முருகன் தமிழ்த் தெய்வம். செந்தமிழ்ப் பரமாசாரியனென வும், தலைச்சங்கப் புலவருள் ஒருவனெனவும், போற்றப்படுகி ருன். அகத்தியர், நக்கீரர், பொய்யாமொழியார், அருணகிரி நாதர் முதலிய எண்ணிறந்த செந்தமிழ்ப் புலவர்கள் முருகனைப் பாடி அருள் பெற்றவர்கள்.

"மொய்தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதாரையுமங்கு வாழவைப்பான்."

என்ற திருவாக்கினுல் தமிழுக்கு அவன் அருளுந்திறம் விளங் கும். இத்தமிழ்த்தெய்வ வழிபாடே தமிழ்நாட்டிற் பண்டைக் காலத்திற் பரவியிருந்தது. ஐந்திணை நிலங்களிற் குறிஞ்சிக் குரிய தெய்வம் முருகனே. இது "சேயோன் மேய மைவரையுலகமும்" என்ற தொல்காப்பிய அடியால் உணரலாம். இப்பெருமானது படைவீடுகள் என ஆறு தலங்கள் கூறப்பட்டுள்ளன. அவை யாவன:— திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவி னன்குடி, திருவேரகம், குன்றுதோருடல், பழமுதிர் சோலை யென்பன.

இவ்வாறு படைவீடுகளும், திருமுருகாற்றுப்படை, கந்த புராணம், திருப்புகழ் முதலிய பல நூல்களிலும் சிறப்பித்துப் போற்றப்படுகின்றன. அவற்றுள் திருவேரகம் என்பது கும்ப கோணத்துக்கு அருகிலுள்ள சாமிமலை யெனப்பிற்காலத்தார் பல ரும் கருதலாயினர். ஆனுல் சுவாமிமலை ஏரகம் அன்று.

சிலப்பதிகாரம் குன்றக்குரவையில் "வெண்குன்றும் ஏரகமும்" என்ற தொடரின் உரையில் "வெண்குன்றம்—சுவாமிமலை"

என உரை எழுதியுள்ளார் அந்நூல் அரும்பத உரையாசிரியர். ஏரகம் என்பதற்கு அடியார்க்கு நல்லார் உரை கிடைத்திலது. திருமுருகாற்றுப் படையுரையில் உரையாசிரியர் நச்சினார்க் கினியர் "ஏரகத்துறை தலுமரியன்'' (முருகு. 189) என்றவிடத்து ஏரகம்—மலைநாட்டகத் தொரு திருப்பதி என்றார். மலைநாடு என்பது சேரநாடாகும். சுவாமிமலையோ சோழ நாட்டகத் துள்ளது என்பது அனைவரும் அறிந்ததே. நச்சினார்க்கினியர் பாண்டி நாட்டினராயினும் சோழ நாட்டின் சிறந்த ஊர்களை எல்லாம் அறிந்தவர் என்பது "மன்னர் பாங்கிற் பின்னோராகுப'' என் னும் தொல் அகத்திணையியல் 30-ஆம் சூத்திரத்திற்கு உரை கூறுகையில் "அவருள் உழுவித்துண்போர் மண்டில மாக்களும் தண்டத்தலைவருமாய்ச் சோழ நாட்டுப்பிடவூரும், அழுந்தூரும், நாங்கூரும், ஆலஞ்சேரியும், பெருஞ்சிக்கலும், வல்லமும், கிழா ரும் முதலிய பதியிற்றோன்றி வேளெனவும், அரசெனவும் உரிமை யெய்தினோரும், பாண்டிநாட்டுக் காவிதிப்பட்ட மெய்தினோரும், குறு முடிக்குடிப் பிறந்தோர் முதலியோருமாய் முடியுடை வேந்தர்க்கு மகட் கொடைக்குரிய வேளாளராகுப'' என்று கூறு வதால் உணரலாம். எனவே ஏரகம் என்பது சுவாமிமலை அன்று என்பது நச்சினார்க்கினியர்க்கும் கருத்தாம்.

அருணகிரிநாதர் முதலியோர் வாழ்ந்த பிற்காலத்தேதான் சுவாமிமலை–ஏரகம் என்று வழங்கத்தொடங்கிற்றென உணர் கிறோம். பண்டைக் காலத்தில் சுவாமிமலை வெண்குன்றம் என்றே வழங்கப் பெற்றிருத்தல் வேண்டும். திருமுருகாற்றுப் படை, சிலப்பதிகாரம் முதலியவற்றிற் குறித்துள்ள திருவேரகம் யாது என்பது பற்றி ஆராய்வது அறிஞர் கடமையாகும்.



# வேண்டுவதே

திரு. R. பஞ்சநதம் பிள்ளை அவர்கள்,

*தமிழ்ப் புலவர், திருச்சிராப்பள்ளி.*



சிறந்த பிறப்பாகிய மனிதப்பிறப்பு, மனிதர்க்குத் தற் செயலாய்க் கிடைத்துள்ளது. "வாய்த்தது நந்தமக்கீதோர் பிறவி மதித்திடுமின்" என்கிறுர் அப்பர். இப்பிறப்பில் இகத்துக் குரிய கடமைகளைச் செய்வதுடன் பரத்துக்குரிய கடமைகளையும் செய்யவேண்டும் என்பர்.

"மானுடப் பிறவிதானும் வகுத்தது மனம் வாக்காய
ஆனிடத் தைந்துமாடும் அரன்பணிக்காக அன்றே."

(சிவஞான சித்தியார்.)

யாவற்றையும் கடந்த பரம்பொருளாகிய இறைவன், உயிர் களுக்கு அருள் செய்யவேண்டிப் பூவுலகில் ஆங்காங்குள்ள பல தலங்களில் எழுந்தருளி அருள்செய்து வருகிறுன். அடியார் களும் அவன் வீற்றிருக்கும் கோயில்களுக்குச் சென்று வழிபட்டு வருகிறுர்கள். இறைவழிபாட்டில் காமியமாகவும் – அதாவது பயனை விரும்பியும், நிஷ்காமியமாகவும் – பயனை விரும்பாமலும் வழிபடுவதுண்டு. கண்ணப்பர் முதலியோர் நிஷ்காமிய வழி பாட்டில் ஈடுபட்டவர்கள். பெரும்பான்மையோர் காமிய வழி பாட்டிலேயே செல்வர். பயனை விரும்பிச் செய்யும் வழிபாட்டில் இம்மையைக் குறித்தும், மறுமையைக் குறித்தும் வேண்டி வழிபடுவர்.

உலக வாழ்க்கையில் சிறுவர் முதல் பெரியோர் வரையில் அவரவர் மனநிலைமைக் கேற்றபடி பல வேண்டுதல்களைக் கேட்பர். இராமலிங்க சுவாமிகள் இறைவனிடத்தில் சில வரங்களை வேண்டுகிறுர்.

"அப்பா நான் வேண்டுதல் கேட்டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட்கெல்லா நான் அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான்சென்றே
எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேனிலைமேல் சுத்த சிவமார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்
தப்பேது நான் செயினும்நீ பொறுத்தல் வேண்டும்
தலைவ நினைப்பிரியாத நிலைமையும் வேண்டுவனே."

மன்னவனைக் காணச்செல்லும் புலவர்களும் தங்கள் வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களைக் கேட்டுப் பெறுகிறார்கள். இவ்வாறு வேண்டப்படும் பொருள்களில் எவைகளை வேண்டுவது என்பதுபற்றி ஆன்றோர் பலர் பல கருத்துக்களைக் கூறியுள்ளார்கள். ஒரு பொருளையும் வேண்டாத மனப்பான்மையும், மீளவும் பிறவாமையையும் திருவள்ளுவர் வேண்டுகிறார்.

"வேண்டாமை அன்னவிழுச் செல்வம் ஈண்டில்லை"
"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை." (குறள்.)

காரைக்காலம்மையார் தமக்கு வேண்டுவதையும், வேண்டாததையும் வகைப்படுத்தி இறைவனிடம் கேட்கிறார். அழியாத அன்பையும், மீண்டும் பிறவாமையையும், பிறந்தால் இறைவனை மறவாமையும், பெருமான் ஆடும்போது திருவடியின் கீழ் இருக்கவும் வேண்டுகிறார்.

"இறவாத இன்பஅன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டும் மீண்டும்பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும் நான்மகிழ்ந்துபாடி
அறவாநீ ஆடும் போதுன்அடியின் கீழ்இருக்க—என்றார்."
(பெரிய புராணம்)

குமரகுருபர சுவாமிகள் இம்மை மறுமைப் பயன்களைக் குறித்து வேண்டுகிறார்.

"எழுத்து முதலாம் ஐந்து இலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்து—ஒழுக்கமுடன்
இம்மைப் பிறப்பில் இருவாதனை அகற்றி
மும்மைப் பெருமலங்கள் மோசித்து—தம்மை விடுத்து

ஆயும் பழைய அடியாருடன் கூட்டித்
தோயும் பரபோகம் துய்ப்பித்துச்—சேய
கடியேற்கும் பூங்கமலக்கால் காட்டி ஆட்கொண்டு
அடியேற்கும் முன்னின் றருள்." (கந்தர்கலி வெண்பா)

தொண்டரடிப்பொடி ஆழ்வார், பிணி, பசி, மூப்புத் துன்பம் காரணமாகப் பிறவிவேண்டேன் – என்கிருர்.

"ஞாலம்நின் புகழேமிக வேண்டும்தென்
ஆலவாயில் உறையும் எம்ஆதியே."

என்று திருஞானசம்பந்தர் இறைவனுடைய புகழையே வேண்டுகிருர். இவ்வாருகப்பலர் வேண்டுவனவும், வேண்டாமையும் வேண்டி, வேண்டுதல் வேண்டாமையிலாதவனுகிய இறைவன் திருவருளைப்பெறலானுர்கள்.

இனி வேண்டாமைப் பொருள்களில் பிறவி வேண்டாமையும் பலர் கேட்டிருக்கிருர்கள். ஆனுல் திருநாவுக்கரசர் ஒன்று வேண்டுகிருர். கண்பெற்றபயனுக அற்புதக்கூத்தைச் செய்யும் ஆடல்வல்லானுகிய ஸ்ரீ நடராஜப் பெருமானது அழகிய வடிவத்தைக்கண்டு தரிசித்தற்கு மனிதப் பிறவிவேண்டும் என்கிருர். தரிசிக்க வந்தவர்களை வரவேற்கும் வளைந்தபுருவமும், கொவ்வைக்கனி போன்ற வாயில் புன்சிரிப்பும், குளிர்ச்சியான சடையும் பவளம் போன்ற மேனியில் வெண் திருநீறும், இன்னருளைத்தரத் தக்க தூக்கிய திருவடியும் (குஞ்சிதபாதம்) காணப்பெற்ருல் மனிதப்பிறவி வேண்டுவதே என்று பாடுகிருர் அப்பர்.

"குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிழ்சிரிப்பும்
பனித்தசடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்ருல்
**மனித்தப்பிறவியும் வேண்டுவதே இந்தமா நிலத்தே."**
(திருநாவுக்கரசர்)

இப்பாடலில் புருவம் முதல் திருவடிவரையில் கேசாதிபாத வர்ணனையாக – முடிமுதல் அடிவரையில் உள்ள பேரழகுகள் விளக்கப்பட்டுள்ளன. முடிவில் பிறரெல்லாம் வேண்டா எனக் கூறிய மனிதப் பிறப்பு வேண்டும் என்று வற்புறுத்திக் கூறு

கிறார். உடம்பினைப் பெற்ற பயன் உத்தமனைக் காணவேண்டியது தானே.

இனிப்பிற்காலக் கம்பர் எனப்போற்றப்படும் மகா வித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, இறைவனை வணங்குவதுபோல் மனிதப் பிறப்பையும் வணங்குகிறார். மணிவாசகரைச் சந்தப் பாடல்களால் துதிக்க நேர்ந்த மனிதப் பிறவிக்கு அஞ்சலி கூறுகிறார்.

"எந்தப்பிறப்புங் கொடியதென இம்மாநிலத்தில் எல்லோரும்
முந்தப்புகல்வர் அதுநிற்க வாதவூரெம்முழு முதலைச்
சந்தப்பனுவல் கொடுதுதிக்கச் சார்ந்த பிறப்பு எப்பிறப்போ
அந்தப் பிறப்பைப் பல்காலும் அன்பில்தொழுதஞ்சலி செய்வாம்."

(திருப்பெருந்துறைப் புராணம்)

எனவே பிறவி வேண்டாம் என்பதை விட்டு, இறைவழிபாட்டிற்கென்றே அமைந்த மனிதப்பிறப்பில் இறைபணி நிற்றலாகிய கடமைகளைச் செய்து அவனருளைப் பெற்று வாழ்வோமாக.

"வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்."

---

# மண்ணிடைத் தோன்றிய மறை

வித்துவான், சு. விஜயசரஸ்வதி அவர்கள்,
தமிழாசிரியை,
கோபாலபுரம் மகளிர் உயர்நிலைப்பள்ளி, சென்னை.



இறைவன் மண்ணுலகில் அவதரித்துத் தம் திருவடித் தாமரைகள் நோக ஓடுவதும், தொண்டனுக்குத் தூது செல்லுவது மாகிய வரலாறுகளைப் படிக்கின்றோம். இறைவன் அடியார்களைக் காப்பதற்கு இவ்வாறெல்லாம் அவதாரங்கள் எடுக்கவேண்டுமா? அவர்களிடையே தாம் புகுந்து பலப்பலத் தொண்டுகள் செய்வது இறைவனின் பெருமைக்கு ஒரு மாசன்றோ? கணங்கள் இருக்கக் காவலர்களுமிருக்க, அடியார்களிருக்க, ஆழ்வார்களுமிருக்க இறைவனே அவதரித்து உலகத் துன்பங்களை ஏற்று மக்களிடையே உறைவது ஏன்? என்பது போன்ற கேள்விகள் அன்றும் இன்றும் எழுகின்றன.

இறைவன் மண்ணுலகில் அவதரிப்பது ஏன் என்பதற்கு, இறைவனே கண்ணனாக அவதரித்துக் காண்டீபனுக்கு வழங்கிய கருத்துரையில் விளக்குகின்றார்.

> "எவ்வெப்போது தருமத்திற்குக் குறைவும்,
> அதருமத்திற்கு எழுச்சியும் உண்டாகின்றதோ
> அவ்வப்போது நான் என்னைப் படைத்துக்
> கொள்ளுகிறேன்."
>
> — பகவத்கீதை.

அறுபத்து மூவரில் ஒருவராக விளங்கியவர் விறன்மிண்ட நாயனார். அவர் சிவபெருமானுடைய திருவடிகளிடத்துப் பற்றுக் கொண்டவர்; சிவனடியாரிடத்துப் பேரன்பு கொண்டவர்; சிவ பெருமான் எழுந்தருளியுள்ள எல்லாப் பதிகட்கும் சென்று வணங்க விருப்பம் கொண்டவர். அவர் செல்லும் இடங்களி

லெல்லாம் அங்குள்ள சிவனடியார்களை முதலில் வணங்கிய பின்னரே சிவபெருமான் திருவடிகளை வணங்கச் செல்லுவது வழக்கம்.

ஒரு சமயம் விறன்மிண்ட நாயனர் திருவாரூரை அடைந்து தியாகராசப் பெருமானைத் தரிசனம் செய்து கொண்டிருந்தார். ஒருநாள் அங்குள்ள தேவாசிரிய மண்டபத்தில் நிறைந்து விற்றிருக்கின்ற சிவனடியார்களை வணங்கிச் செல்லாமல் ஒரு புறமாக ஒதுங்கிச் சென்ற சுந்தரமூர்த்தி நாயனுரைக் கண்டார்; உடனே மனம் வெகுண்டார். அடியார்களை வணங்காமல் செல்லுகின்ற வன்றொண்டன் அவ்வடியார்கட்குப் புறம்பாவான் என்று சீறினர். ஏன்? சிவபெருமானையே தூதுகொண்ட சித்தரை அவர் விரும்பவில்லை. பெருமானே தூது செல்ல இசைந்தாலும் அவனை ஏவுகின்றவனும் ஒரு தொண்டனு? இப்பாவச் செயலுக்கு மனம் நடுங்காதவன் அடியார்களுக்கே புறம்பானவன். அவனை வலிய ஆட்கொண்டு அவனுக்குத் தூது சென்ற அப்பெருமானும் புறம்பானவனே என்று வெகுண்டார்.

“ சேணுர் மேருச் சிலைவளைத்த
சிவனுர் அடியார் திருக்கூட்டம்
பேணு தேகும் ஊரனுக்கும்
பிரானுந் தன்மைப் பிறைசூடிப்
பூணுர் அரவம் புனைந்தார்க்கும்
புறகு என் றுரைப்ப”... — பெரிய புராணம்.

இனித் திருவாரூரில் அடியெடுத்தே வைப்பதில்லை என்று சூளுரைத்து அந்நகரின் வடக்கிலுள்ள புத்தாற்றங்கரையை அடைந்தார். அங்கே ஒரு பந்தல் அமைத்து அடியார் பூசை முதலியன வழுவின்றி நடாத்தி வந்தார். இவ்வாறு ஒழுகும் நாளில் அங்கு வரும் அடியார் எவரேனும் திருவாரூர் என்ருலே அவரது கால்களை மழுவினுல் வெட்டும் சபதம் கொண்டார்.

ஒருநாள் அங்குத் தியாகேசரே சிவனடியாராக வந்தார். தாம் இருப்பது திருவாரூர் என்றும் கூறினர். உடனே விறன் மிண்டர் வெகுண்டு எழுந்து அவரது கால்களை வெட்டுதற்கு

மழுவுடன் ஓடினர். இக்கருத்தை அறிந்த தியாகேசன் ஆரூரை நோக்கி ஓடினர். விறன்மிண்டர் அவரை விடாது துரத்திச் சென்றர். இருவரும் ஆரூர் எல்லையைக் கடந்து விட்டனர். அப்போது தியாகேசன் வந்தோம் இப்பால் என்று கூறி நின்றனர். உடனே விறன்மிண்டர் தம் சூளுரை தோற்றது கண்டு வருந்தி மழுவால் தம் கால்களைத் தாமே வெட்டிக் கொண்டார் என்பது தல வரலாறு.

சிவன்பால் அன்பு வைத்த ஒரு சிவனடியாரே சிவனின் செயலை வெறுத்துச் சிவனைப் புறகு என்று சொல்லி ஓடிய பிறகும், சிவபெருமானே தம் அடியாரை ஆட்கொள்ளுதற்கு அவதரித்தமை இங்குச் சிந்திக்கத் தக்கதாகும்.

அறுபத்து மூவரில் மற்றொருவர் ஏயர்க்கோன் கலிக்காம நாயனர். அவர் சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருப்புன்கூர் என்னும் பதியினில் அளவற்ற திருப்பணிகள் செய்து வந்தவர். திருநீற்றை விரும்பிய சிவபெருமானின் திருவடியே தமக்குச் செல்வம் என்று எண்ணித் துதித்து வந்தவர்.

சுந்தரமூர்த்தி நாயனர் சிவபெருமானையே பரவையாரிடம் தூதுவிட்டார் என்ற செய்தியைக் கலிக்காமர் கேள்விப்பட்டார். வன்றொண்டர் சிறிதும் மனம் நடுங்காமல் தமது பெருமானை ஒரு பெண்ணிடத்துத் தூதுவிட்ட இழிவுச் செயலுக்கு மிகக் கோபம் கொண்டார். இறைவனிடம் ஒரு தொண்டன் வேண்டும் பொருள் இதுவோ என்று அவர்மீது வெறுப்புக் கொண்டார்.

ஒரு பெண்ணிடத்துக் கொண்ட ஆசை காரணமாக ஒருவன் ஏவினுல் அதற்கு உடன்பட்டு ஓர் இரவு முழுமையும் தம் திருவடிகள் நோகும்படித் தேரோடும் வீதியிலே இறைவர் தூதாகச் சென்றமை கலிக்காமரை வருத்தியது. நான்முகனும் மாலும் காணவொண்ணுத சிவபெருமான் தூதுசெல்ல இசைந்தாலும், அங்ஙனம் ஏவுதல் செய்யலாமோ? இப்பாவச் செயலுக்கு நடுங்காத ஒருவனே தம் நோய் தீர்க்க வருவது? இது திருவருள் கட்டளையே ஆயினும் இதை ஏற்க அவர் மனம் விரும்பவில்லை. எனவே வாள் கொண்டு வயிற்றைக் கிழித்துக்கொண்ட வரலாறும் படிக்கின்றோம்.

பெரியதும் வலியதுமான நீராவிக் கப்பல் அதன் பின்னே உள்ள சிறு படகுகளையும் தோணிகளையும் இழுத்துக்கொண்டு நீரைக் கடந்து துறைமுகத்தை அடைகின்றது. அதுபோலவே இறைவனாகிய நீராவிக்கப்பல், மயக்கத்தில் வீழ்ந்த மக்களாகிய படகுகளை இழுத்துக்கொண்டு மாயையாகிய கடலைக் கடந்து நல்ல துறைமுகத்தை அடைகின்றது.

பழக்கவழக்கத்தில் வேற்றுமை உடையவர்களே ஆயினும் இறைவனைப் பக்தியுடன் அணுகினால் அவர்களுக்கும் சிவப் பேறு கூறப்படுவதால், இறைவனுக்கு வேண்டுதல் வேண் டாமை இல்லை என்பதும் சிந்திக்கத்தக்கது.

"பாதியாய் அழுகிய கால்கைய ரேனும்
பழி குலமும் இழி தொழிலும் படைத்தா ரேனும்
ஆதியாய் அரவணையாய் என்பாராகில்
அவரன்றோ யாம் வணங்கும் அடிகளாவர்;
சாதியா லொழுக்கத்தால் மிக்கோ ரேனும்
சதுர்மறையால் வேள்வியாற் றக்கோ ரேனும்
போதில் நான்முகன் பணியப் பள்ளி கொள்வான்
பொன்னரங்கம் போற்றுதார் புலையர் தாமே."

— *திருவரங்கக் கலம்பகம்.*

பதினாறும் நூற்றாண்டில் தோன்றிய புதிய சமயங்களில் தீன் இலாகி அல்லது தெய்விகமதம் என்பதும் ஒன்று. எல்லா சமயங்களின் அடிப்படைக் கொள்கைகளையும் ஒன்று சேர்த்து இஃது உருவாக்கப்பட்டது. புலால் புசித்தலைத் தவிர்க்க வேண்டும்; பசுவதை கூடாது; மதசுதந்திரம் உண்டு; பிறமதங் களை இழிவுப்படுத்தக் கூடாது என்ற கருத்துக்களை அமைத்து இச்சமயம் அக்பரால் தோற்றுவிக்கப்பட்டது. நாட்டில் ஒழுங் கான நிருவாக முறையை அமைத்துத் திறமையுடன் அர சாண்ட அக்பரது சபையில் பீர்பால் முதலிய பெரும் புலவர்கள் இருந்தனர்.

பேரவையில் ஒருநாள் புலவர் பெருமக்கள் கூடியிருந்தனர். அன்று அறிவிற் சிறந்த அக்பரிடம் ஒரு கேள்விபிறந்தது.

"இறைவன் யாவும் செய்ய வல்லவன் தானே ?"

"ஆம்! அவர் அணுவையும் ஆட்டிப் படைக்க வல்லவர்!" என்று பதிலளித்தார் பீர்பால்.

"ஆட்டிப் படைக்கும் இறைவனுக்குத் தொண்டு செய்ய எண்ணற்ற அடியார்களும், பூதகணங்களும் காத்திருப்பதும் உண்மைதானே ?"

"ஆம் !"

"அப்படியானுல் மக்களது துன்பம் துடைத்திட அடியார்களேயோ, கணங்களேயோ அனுப்பாது மண்ணிடைத் தானே அவதரிப்பது ஏன் ?"

நுண்ணறிவு பெற்ற பீர்பால் சிறிது யோசித்தார். தக்கதொரு விடை காண விழைந்தார். இதற்குத் தாம் ஒரு மாதத்தில் விடைதருவதாகச் சொன்னுர். அவை கலேந்தது.

ஒரு நாள் அக்பர் தமது அமைச்சர்களும், அவைப் புலவர்களும், படைக்கணங்களும் சூழ்ந்த குழுவுடன் யமுனேயில் உல்லாசப் பயணம் செல்ல இருந்தார். அன்று குறிப்பிட்ட காலத்தில் அக்குழுவில் கலந்து கொள்ள பீர்பால் வரவில்லே. படகுகள் நீர்த் துறையினின்றும் விலகிச் சிறிது தூரம் சென்று விட்டன.

அக்பரது மகன் இளவரசைத் தூக்கிக் கொண்டு பீர்பால் நீர்த்துறைக்கு வந்தார். அப்பொழுது அக்பரின் படகு சிறிது தூரத்தில் சென்று கொண்டு இருந்தன. இதைக் கண்ட பீர்பால் ஒரு தனிப் படகைத் தானே செலுத்திக் கொண்டு இளவரசுடன் அக்பரை நோக்கிச் சென்ருர். பீர்பாலது படகு ஒரு சுழலில் சிக்குவதை அக்பர் கண்டார். சுழலில் சிக்கிய படகைப் பீர்பால் திறமையுடன் செலுத்தியும், படகு நீரில் கவிழ்ந்தது. இதைக்கண்ட அக்பர் நீரில்குதித்து நீந்திச் சென்று இளவரசைக்காக்க முயன்ருர். ஆனுல் அவரது முயற்சி அவரை ஏமாற்றி விட்டது. நீரில் முழுகியது இளவரசு அல்ல என்பதும், அது பீர்பாலினுல் நடத்தப்பட்ட ஒரு பொம்மலாட்டம் என்பதும் பின்னர் தெரிந்து மிக்க கோபம் கொண்டார்.

"மன்ன ! மன்னிக்க வேண்டும்! தாங்கள் ஒரு மாதத்திற்கு முன்பு எழுப்பிய கேள்வியின் விடையே இந்த நிகழ்ச்சியாகும்.

தங்களது உல்லாசப் படகில் அமைச்சர்களும், படைவீரர்களும், பணியாட்களும் நிறைந்து இருப்பினும் இளவரசைக் காப்பதற்குத் தாங்களே முந்திக் கொண்டீர்கள். அது போலவே அடியார் களும், பூதகணங்களும் நிறைந்து இறைவனைச் சூழ்ந்திருப் பினும் மக்களது துன்பம் துடைக்க மண்ணிடை அவதரிப்பதிலும் முந்துவது இறைவனது இயல்பாகும்" என்று இந்நிகழ்ச் சிக்கொரு விளக்கம் தந்தார் பிர்பால்.

"நாத முடையதோர் நற்கமலப் போதினில்
நண்ணிய நன்னுதலார்
ஓதிப் பணிந்தலர் தூவியேத்த ஒளிவளர்
சோதியெம் ஈசன்; மன்னும்
போதலர் சோலைப் பெருந்துறையெம் புண்ணியன்,
மண்ணிடை வந்து தோன்றிப்
பேதங் கெடுத்தருள் செய்பெருமை அறியவல்
லார்எம் பிரானுவாரே." (திருவாசகம்)

---

இராகம்: பைரவி தாளம்: மிஸ்ரசாபு

பல்லவி

கனவிலும் நனவிலும் கருதித்துதிக்கும் என்னை
காத்தருள்வாய் ஐயா முருகையா (கனவிலும்)

அனுபல்லவி

உனையன்றியே எனக்கு ஆதாரம் வேறில்லையே
நினைந்தேன் மனத்தொல்லையே இன்னலை நீக்கவே (கனவிலும்)

சரணங்கள்

1. அறிந்தறியாமல் செய்த பிழைகள் பொறுத்து என்னை
அன்பாய் ஆளத்தகாதோ ஏழைசொல் ஏற்காதோ
அடிமை எனக்குத்துணை ஆதரவு அனைத்தும்
அனவரதமும் நீயே அன்பனே அனுதினம் (கனவிலும்)

2. எல்லாம் நீயாயிருந்து சொல்லா மரபு செய்து
பொல்லாவினையை நாடும் கல்லா மனமேன் தந்தாய்
நில்லா மனக்குரங்கை நிறுத்தி ஆளத்தெரியேன்
வல்லாளனே தாசன் முத்தையனும் மறவேன் (கனவிலும்)

வி. கே. முத்தையா பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
வண்ணார்பேட்டை, திருநெல்வேலி.



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால்
புதிதாக திருப்பனந்தாளில் நிர்மாணிக்கப்பெற்ற சகலகலாவல்லி நூல்நிலையக் கட்டிடத்திறப்புவிழா
சார்வரி விஜயதசமி 30—9—1960

ஆடுதுறை ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் கன்னியாகுமரி கடலில் நீராடும் காட்சி



படம்:— ஆடுதுறை ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர் அவர்கள் உதவியது.

# "தை பிறந்தால்"!

தருமபுர ஆதீன வித்துவான்
திருவண்ணாமலை ஆதீனவிரிவுரையரசு. மதுரை ஆதீனச் சித்தாந்த
சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர் மாமணி, பாலகவி
**வயிநாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்**
தேவகோட்டை.

---

"**தை** பிறந்தால் வழி பிறக்கும்" என்பது நம்நாட்டுப் பழமொழி. இது பெரும்பாலும் பெண்ணைப் பெற்றுத் திருமணத்தை எதிர் நோக்கிக் கொண்டிருக்கிற பெற்றோர்களிடந் தான் மிகுதியாக வழங்கப் பட்டு வருகிறது. ஆனால் தமிழ் நாட்டில் பிறந்த ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் இப் பழமொழி உருப்பெற்று முன்னிற்கிறதென்பதை யாரும் மறுக்க முடியாது.

"உண்டி முதற்றே உணவின் பிண்டம்" என்று பழந் தமிழ் நூல் சாற்றுகின்றது. வாழ வேண்டிய மக்களுக்கு வளங் கொடுத்துக் காப்பாற்றுவது உணவு. நில மகளின் பெருங் கருணைக்கு அறிகுறியான தானியம் முதலியவற்றைப் புத்தம் புதியனவாகப் பெறுவதும்; பெற்ற அவற்றை வீடு தூய்மை செய்து, வெண் சுண்ணமும், செங்காவியும் வியத்தகு முறையில் தீற்றி, மனைவி மக்களுடன் மகிழ்ந்து கொண்டாடிப் பக்குவஞ் செய்து உண்டு களிப்பதும், தைப் பிறப்பல்லவா?

யார் யாருக்கு எவ்வெப் பொருள்கள் வேண்டினும் அவ்வவை கிடைப்பதற்குரிய வாய்ப்புத் தைப்பிறப்பை யொட்டி நிகழ்கின்றது. தமிழரின் தலைத் திங்களான தைத் திங்கள், அவர்களது மனமகிழ்ச்சிக் குரிய மாண்புடையதாய்ப் பண்டு தொட்டுப் பாராட்டப் பெற்று வருகின்றது.

தைத் திங்கள் தொடங்கி ஆனித் திங்கள் வரையுள்ள ஆறு திங்களும் தகை சான்றவை; என்று சான்றோர் கூறக்

கேட்கின்ரேம். ஒவ்வொரு நாளிலும் கதிரவன் தோன்றும் காலைப் பொழுதும் அதற்கு முந்திய வைகறைப் பொழுதும் நன்மை மிக்கன. அதுபோலத் தமிழ் ஆண்டுத் தொடக்கமாகியத் தைத் திங்களும் நன்மை மிக்கன என்று நம் முன்னேர்கள் கண்டார்கள்.

வைகறைப் பொழுதில் நீராடுதல் மாண்பு தருவதென்பதை நாமறிவோம். இக் குறிப்பையொட்டியே சமய நூல்களில் "மார்கழி நீராடு"தலும், சங்க நூல்களில், "தைந் நீராடு" தலும் கூறப் பெற்றுள்ளன. மார்கழித் திங்களில் வைகறை நீராடிப் பாவை நோன்பு நோற்றக் கன்னிப் பெண்கள் மனதிற் கிசைந்த மணாளனை விரைவில் பெற்று மகிழ்வாரென்பது நம் நாட்டு மரபு. இதையொட்டியே திருவாசகத்தில் திருவெம் பாவையும், திவ்ய பிரபந்தத்தில் திருப் பாவையும் வெளி வந்துள்ளன.

இவை போன்ற பல செய்திகளால் தமிழ் நாட்டு மக்கள் அவரவர்களுக்கு வேண்டிய எல்லா நலங்களும் தை பிறந்தால் உண்டாகும் என்று கொண்டிருந்ததைநன்கறியலாம். இன்றைய நிலையில் நம்முள் ஒவ்வொருவருக்கும் வேண்டிய சிறப்புப் பொருட்கள் ஒரு புறமிருக்கப் பொதுவாகத் தமிழ் நாட்டு மக்கள் அனைவருக்கும் வேண்டியவை உண்டியும் உடையும் என்பதை யாரும் மறுக்க முடியுமா ?

போருக்கு முன்னே ரூபாய்க்கு ஆறு படி விற்ற அரிசி இன்று ரூபாய்க்கு ஆறு உழக்குக் கிடைப்பது அருமையாகி விட்டது. அன்று ஆறு அணு விற்ற நாலுமுழ வேட்டி இன்று இரண்டரை ரூபாய்க்குக் கிடைக்க மாட்டேனென்கிறது.

இந்த நிலைமையில் உண்டி உடைபற்றிய அளவிலாவது "தை பிறந்தால் வழி பிறக்கும்" என்று எதிர் பார்க்க வேண்டியவர்களாகத்தான் நாம் இருக்கிரேம். தமிழ்ப் பெரு மக்களின் தனித் திருநாளாகிய தைப் பிறப்பு நாளிலிருந்தேனும், தமிழ்நாடு தனிச் சிறப்புற்று எதற்கும் முடையின்றி இன்புற்று வாழ ஆண்டவனை வேண்டுவோமாக.

பொங்கல் பொங்குக ! மங்கலம் பொலிக !

---

# "சங்கரனே சண்முகன்"

கயப்பாக்கம், திரு. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள்,
சென்னை.

திருச்சிற்றம்பலம்

"நன் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன் கடன்னடி யேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே.

திருச்சிற்றம்பலம்

ஶம் + கரோதி இதிசங்கர: என்பது வடமொழி சமாசம். சம் = (உயிர் கட்குச்) சுகத்தை; கரோதி = செய்பவன்; எல்லாம் வல்ல இறைவன் சிவபெருமான். இவன் எட்டுவகைப்பட்ட குணங்களையுடையவன். இப்பரம் பொருளைத்தான் திருவள்ளுவ நாயனரும் தம் திருக்குறளின் கடவுள் வாழ்த்தாகிய முதல் அதிகாரத்தில் "எண் குணத்தான்" என்றழைத்துள்ளார். இத் திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரை வருமாறு: "எண் குணத் தான் = எண்வகைப்பட்ட குணங்களையுடையான். எண் குணங் களாவன: (1) தன்வயத்தனுதல் (2) தூயவுடம்பினனுதல், (3) இயற்கையுணர்வினனுதல் (4) முற்றுமுணர்தல் (5) இயல்பாக வேபாசங்களினீங்குதல், (6) பேரருளுடைமை (7) முடிவிலாற்ற லுடைமை (8) வரம்பில் இன்பமுடைமை என இவை. இவ்வாறு சைவாகமத்துட் கூறப்பட்டது." எனவே, இத்தகையலக்ஷணங் களையுடையவனே இறைவனுவான்.

2. இவ்விறைவனுக்கு ஒரு நாமம், ஒரு உருவமில்லை எனினும், ஆயிரந் திருநாமங்களால் இவனை நாம் அழைக்கின் ரேம். ஆயிரம், அநேகம் என்ற பொருளில் வந்தது. இதற்குப்

பிரமாணம், "ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமிலார்க்கு ஆயிரந் திருநாமம் பாடி" என்பது மணிவாசகம். இப்படிப் பல திரு நாமங்களையுடைய இறைவனைச் சிவன் என்று நூல்கள் அழைக்கும். இத்திருநாமம் இவனுக்கே உரியது. ஏனையதெய்வ வேதங்கட்கு இல்லை. இதற்குப் பிரமாணம்: "சிவனெனும் நாமம் தனக்கே யுடைய செம்மேனிபெம்மான்" என்பது அப்பர் அருண்மொழி. சிறப்பு வகையில் சங்கரன் என்றும் இப்பரம் பொருள் அழைக்கப்படுவான். இச்சொல்லை எந்தச் சமயத்தில் தெய்வச் சேக்கிழார் பெருமான் பிரயோகம் செய்துள்ளார் என் பதைக் கவனித்தால் இத்திரு நாமத்தின் சிறப்புத்தன்மை நன்கு புலப்படும்.

3. இளையான் குடிமாற நாயனர் புராணத்துள் 25-ஆவது செய்யுளில் "சாலவே மயங்குவார்க்குச் சங்கரன் தான் மகிழ்ந்து" என அருளிப் போந்தார். வந்த விருந்தினருக்கு அமுது சமைத்து வைத்து விட்டு அவரை அமுதுண்ண அழைக்கப் புகுந்தார். அவரும் சோதியாகத் தோன்றி மறைந்தபோது, இளையான்குடி மாற நாயனர் மனம் எவ்வாறு இருந்திருக்குமென்பதை யூகித் துணரவேண்டும்! அச்சந்தர்ப்பத்தில் வருந்தும் நாயனருக்கு ஆறுதல் அளிக்குங்காலை இப்பதம் அருமையாகப் பிரயோகப் படுத்தப்பட்டுள்ளது. இத்தகைய சங்கரனே சண்முகனுனன் என்பதைவிளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

4. கந்தபுராணத்துள் பேசப் பெற்ற காசிபருக்கும் மாயைக்கும் மூன்று சாமங்களிலும் முறையே சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் என்னும் மூன்று அசுரர்கள் தோன்றி ஞர்கள். இவர்கள் இறைவனை நோக்கித் தவஞ்செய்தனர். வீர யாகமும் பல்லாயிரம் ஆண்டு செய்தனர். இறைவன் முற்பட வில்லை. உடனே சூரபன்மன் அந்த யாக குண்டத்தில் விழ்ந் திறந்தான். பிறகு சிங்கமுகன் அவ் யாகத்தைத் தொடர்ந்து ஓராயிரம் ஆண்டு செய்தான். இறைவன் வெளிப்பட்டுக் காட்சி யளித்தார். சிங்கமுகனும் இறைவன் திருவடியில் வீழ்ந்து வணங்கிப் பின்வருமாறு விண்ணப்பித்துக் கொண்டான். இதனைக் கந்தபுராணச் செய்யுள்களாலேயே அனுபவிக்கலாம்:

"தந்தையாவான் காசிபனே தாயும் மாயை தானென்பாள்
மைந்தர் யாங்கள் வருமுவர் மக்கள் பின்னும் பலருண்டால்
எந்தாய் அன்னை பணிதன்னுல் யாங்கள் ஈசன் றனக்காக
இந்த வனத்தில் முவருமிவ் வேள்விதன்னை யியற்றினமே."

"அங்கப் பரிசே யாண்டுபல அகல மகத்தை ஆற்றிடவும்
கங்கைச் சடையோன் முன்னின்று கருணை சிறிதும் செய்திலனுல்
எங்கட் கெல்லாம் முன்னவனும் இகல்வெஞ் சூரனது நாடி
மங்குற் செறியும் வானிற் போய் வாளால் தசையீர்ந்திட்டனனே.

"மின்போல் இயங்கும் வாளாற்றன் மெய்யிற் றசைகள் ஈர்ந்துளத்தில்
துன்போர் இறையும் இல்லாத சூரன் மகத்தீ மிசைத்திடலும்
முன்போல் தன்னூன் வளர்ந்திடவே பின்னும் அஃதேமுயன்றதற்பின்
தன்போல் ஒளிர்வச் சிரகம்பத் தலைவீழ்ந் துருவித்தழல் புக்கான்.

"புக்கு முன்னேன் ஈருகிப் போந்த காலை யாங்கண்டு
மிக்க மனத்தில் துயர்கொண்டு வெருவிப் புலம்பி யெமதுயிரும்
ஒக்க விடவே நினைந்தோமால் உம்மைக் கண்டோ ரிறைதாழ்த்தோம்
தக்கதிதுநம் வரன்முறையும் தமியேந் துயருமென மொழிந்தான்."

5. இதனைக் கேட்ட ஆண்டவனும் இவர் பால் கருணை கூர்ந்து சூரபன்மனை எழுப்பித்தந்தான். உடனே மூன்று அசுரர்களும் சிவபெருமானை வணங்கிப் பலவரம் வேண்டிப் பெற்றனர். அப்போது ஆண்டவன் மேற் கொண்ட திருவுருவம்

"நாரிபாகமும் இமையா முக்கண்ணும் திருப்புயங்கள் நான்குமாகி
மூர்மால் விடைமேல் கொண்டு எம்பெருமான் மேவுதலும்........"

என்பதாகும். இனி இவ்வரங்களைப் பெற்ற சூரபன்மனுதியர் எல்லாத் தேவர்களையும், மூவர்களையும் மற்றவர்களையும் துன் புறுத்தி வந்தனர். இத்துன்பத்தைப் பொறுக்க முடியாத தேவர் முதலாயினேர் ஆண்டவனிடம் முறையிட்டனர்: அப்போது மலையரசன் உமையம்மை தனக்குப் பெண்ணுக வரவேண்டு மென்று தவங்கிடந்தான். அவனுக்கு அருள்புரிய வேண்டி உமையம்மையை அவனுக்கு மகளாகத்தந்தான். அவளும் பார் வதி என்ற திருநாமத்துடன் மேருமலைச்சாரலில் சிவபெருமானை மணக்க எண்ணித் தவம் புரிந்தாள். சிவபெருமான் சக்தியைப் பிரிந்தபின்னர் கயிலை மலையில் சனகாதி நால்வருக்கு மௌனுேப

தேசஞ் செய்து கொண்டு யோக மூர்த்தியாய் வீற்றிருந்தான். உலகம் அபிவிருத்தியாகவில்லை. பிரமாணம், "புல்லாதிருந்தன எவ்வுயிரும் தம் போகத்தையே."

6, இதனைக் கண்ட தேவர்கள் பார்வதியைப் பரமனுடன் சேர்த்து அவர்கள் மூலமாக நல்லதொரு மகனைப்பெற்றுச் சூர பன்மன் முதலியவர்களின் துன்பத்தினின்றும் விடுபட எண்ணினர். இதனை எப்படிச் சாதிப்பது? யாரைக் கொண்டு சாதிப்பது? என்று அனைவரும் சத்யலோகத்தில் ஒன்றுகூடி யோசித்தனர். முடிவில், மன்மதனை யனுப்பிச் சிவபெருமானது யோகத்தைக் கலைத்துப் பார்வதியைத் திருமணஞ் செய்விக்க வேண்டுமென்றனர். பல நல்வார்த்தைகள் சொல்லி மன்மதனைப் பரமன் பால் போய்க் காரியத்தை முடிக்க விரும்பினர். அவன் பல நியாயங்களை எடுத்துக்கூறிச் சிவனைத் தவிர மற்றனைவரையும் தான் வசப்படுத்தக் கூடும் என்றும், சிவனிடம் தன்கைவரிசை செல்லாதென்றும், அப்படிச் செய்ய முயற்சித்தால் தான் இறக்க வேண்டிவரும் என்றும் சொன்னான். பிரமதேவன் கோபித்துக் கொண்டு, போகமறுத்தால் அவனைச் சபிப்பதாகச் சொன்னார். அதற்குப் பயந்து மன்மதன் அவ்வாறே செய்வதாக இசைந்து கயிலைக்குச் செல்லயத்தனித்தான். தனக்குரிய தேரிலேறிப் பஞ்சபாணங்களை எடுத்துக் கொண்டு நந்திதேவர் அனுமதி பெற்றுக் கயிலை மலைக்குள் பிரவேசித்து ஆண்டவன் திருவடிகளில் தன் பஞ்சாயுதங்களைச் சமர்ப்பித்தான். ஆண்டவன் நெற்றிக்கண் சிறிது திறந்தது. மன்மதன் எரிந்து சாம்பரானான். இரதிதேவி புலம்பிப் பரமனிடம் தன் நாயகனை எழுப்பித்தர வேண்டினாள். ஆண்டவனும் தான் பார்வதி தேவியை மணந்து கொண்டபின் மன்மதனை எழுப்பித் தருவதாக வாக்களித்தார். அவளும் ஒருவாறு ஆறுதலடைந்தாள். இதனையறிந்த தேவர்கள் அனைவரும் உள்ளே சென்று பரமன் திருவடியில் விழ்ந்து வணங்கித் தம் குறையைத் தெரிவித்தனர்.

"நஞ்சருந்தியும் நதியினைச் சூடியும் நடுநெற்றித்
துஞ்சும் வெங்கனல் பரித்தும் வெவ்வலியரைத் தொலைத்திட்டும்
அஞ்சலென்று முற்காத்தனை இன்றெ மக்கருளாயேல்
தஞ்சமாருளர் தாதையே யல்லது தனயர்க்கே"

"கங்கை வேணியாய் அம்மையை மணந்தெமைக் கடிகொள்ளத்
திங்கள் வெண்குடை மதனனை விடுத்தனம் தெளிவில்லேம்
அங்கவன்புரம் பொடித்தனை முன்புபோ லமர்ந்துற்ருய்
இங்கியாந் தளர்கின்றதே இனிச்சிறிதிரங் காயோ."

7, இதனைக் கேட்டருளிய இறைவன் மேருமலைக்குச் சென்று தன்னை மணக்கத் தவம் புரிந்துள்ள பார்வதி தேவியின் அன்பின் திறத்தை நன்கறிந்து அவளை மணக்க எண்ணினர். சப்தரிஷிகளைத் தூதாகப் பர்வதராஜனிடம் அனுப்பி முறைப்படிப் பார்வதி தேவியாரைத் திருமணம் செய்து தரும்படிக் கேட்டு அம்மையை மணந்து போக மூர்த்தமாய்க் கயிலையில் எழுந்தருளி வீற்றிருந்தார். சில காலம் சென்றது. தேவர்கள் துன்பம் குறைந்தபாடில்லை. மீண்டும் தேவர்கள் ஒருங்குகூடி வாயுவைப் பரமனிடம் தூதாக அனுப்பினர். நந்தி தேவரால் தடைசெய்யப் பெற்று வீழ்ந்தனன். பின்னர் அனைவரும் கயிலை மலைக்குள் சென்று பரமனை வணங்கித் தங்கள் குறையைத் தெரிவித்தனர். ஆண்டவனும் தேவர்களை நோக்கி "எவ்வர மெனினும் ஈதும் வேண்டிய திசைத்திரென்ருன்." தேவர்கள் வேண்டிய வரம் பின்வருமாறு :

"ஆதியும் நடுவுமீறும் அருவமு முருவு மொப்பும்
ஏதுவும் வரவும் போக்கு மின்பமும் துன்புமின்றி
வேதமும் கடந்து நின்ற விமலஓர் குமரன்தன்னை
நீதரல் வேண்டும் நின்பால் நின்னையே நிகர்க்க என்ருர்."

ஆண்டவனும் அவ்வாறே ஆகுக என்றருள் புரிந்து ஆறுமுகங்களுடன் காட்சி யளித்து நின்ருன். பின்னர் அவ்வாறு திரு முகங்களிலுமுள்ள ஆறு நெற்றிக் கண்களினின்றும் ஆறு தீப் பொறிகளைத் தந்து நின்ருன். அவைகளும் ஆகாயத்தில் சஞ்சாரஞ் செய்து, ஆண்டவன் ஆணையால் வாயு தேவனுலும், அக்னி தேவனுலும் தாங்கப் பெற்று, சூடு பொறுக்காமல் கங்கையில் இடப்பெற்றன. அவளும் தாங்கமாட்டாமல் சரவணத்திடை அவற்றைச் சேர்ப்பித்தாள். அதுகாலை முருகன் தோன்றினுன்.

"அருவமு முருவுமாகி அநாதியாய்ப் பலவா யொன்ருய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்

கருணைகூர் முகங்களாறும் கரங்கள்பன்னிரண்டுங் கொண்டே
ஒருதிருமுருகன் வந்தாங் குதித்தனன் உலகமுய்ய"

8. இவ்வரலாற்றின் விபரத்தைக் கந்த புராணத்துள் பரக்கக் காணலாம். எனவே, சூரபன்மன் முதலியோரைத் தொலைத்துத் தேவர்களைக் காக்க வரங்கொடுத்த சங்கரன் அவ் வடிவத்துடனேயே சூராதிகளை யழித்தல் முறையன்று என எண்ணிச் சண்முகனைத் தோன்றியருள் புரிந்தான். இதற்குப் பிரமாணம்:

"ஈசனே அவன் ஆடலால் மதலையாயினுன்" ஆதலால் சங்கரன் வேறு, சண்முகன் வேறல்ல. சங்கரனே சண்முகன் என்பது பெற்றும். சுபம்:

---

## ஒரு வேண்டுகோள்

'ஞானசம்பந்தம்' இதழின் ஆண்டுக்கட்டணம் மாற்றம்

அன்புடையீர்! வணக்கம், தங்களது ஒத்துழைப்பால் "ஞானசம்பந்தம்" பெருகி வளர்ந்து இவ்விதழில் இருபதாம் ஆண்டு தொடங்குகிறது. பல காரணங்களையொட்டி இவ் விதழின் ஆண்டுக் கட்டணத்தை 1—1—1961 முதல்

உள்நாடு ரூ. 2-25 வெளிநாடு ரூ. 3-00

என்று மாற்ற முடிவு செய்துள்ளோம். 31-12-1960 வரை ஆண்டுக்கட்டணம் பழைய முறையிலேயே இருந்துவரும், அந்த தேதிக்குள் காரியாலயத்துக்கு வந்துசேரும் தொகை பழைய சந்தா கணக்குப்படி வரவு வைத்துக்கொள்ளப்படும். இந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளவும். சந்தாதாரர் அனைவரும் இம்மாற்றத்தை ஏற்று மேலும் எங் களோடு ஒத்துழைத்துப் பத்திரிகை வளர்ச்சிக்கு உதவ வேண்டுகிறோம். இப்புதிய ஆண்டில் எங்களது நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

— செயலாளர்.

# சொக்கநாதர் திருவருட்பா

மாணிக்கவாசகன்
தருமையாதீனப் பல்கலைக்கல்லூரி முதல்வன்

தருமையாதீனத்துச் சிவஞான பீடத்தை இக்காலத்தில் அழகு செய்வித்து வீற்றிருந்தருளும் சீலத்திரு. கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இருபத்தைந்தாவது குருமணி என்பது உலகறிந்த உண்மை. இவர்களது வழி முதல் ஆக விளங்கியருளிய ஆசாரியர்கள் இருபத்துநால்வரும் வெவ்வேறு திறத்தில் மேன்மையுற்றுத் திகழ்ந்தனர். ஒன்பதாமவராகத் திகழ்ந்தருளிய திருநாவுக்கரசு தேசிகரை வழிபட்டு வாழ்ந்து அவர்களிடம் உபதேசம் பெற்று வீற்றிருந்தருளிய குருநாதர் சீலஸ்ரீ சிவஞான தேசிக ஞான சம்பந்த பரமாசாரியர் ஆவார். இப் பத்தாமவராகிய குரு மணியின் பெருமைக்கு ஓர் எல்லையே இல்லை. சிவஞானமே திருவுருக் கொண்டாலன்ன செம்மையார். 'திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்டவர்' என்று இவரையும் சொல்லலாம். இவர் வரலாற்றைச் 'சாத்திரங்களும் தோத்திரங்களும்' என்னும் தருமையாதீன வெளியீட்டில் அறியலாம்.

இப் பெருமானுர் அருளிய நூல்கள் எண்ணிறந்தன. அவற்றுள் தோத்திரப்பாக்கள் அளவிலாதன. அவற்றுள் 'திருவருட்பா' என்ற பெயரில் விளங்கி வந்தனவற்றை மட்டும் தொகுத்துத், தருமையாதீனத்தின் பண்டாரசாத்திர தோத்திரப் பிரிவுள் ஒன்ருக வெளியிட்டிருத்தல் பலர்க்குத் தெரியும். அவ் வெளியீட்டில் அடங்காதனவும் இருத்தல் கூடும் எனத் தெரிகிறது. அவற்றுள் ஒன்று இச் சொக்கநாதர் திருவருட்பா.

இது பத்துப் பாடல் உடையது. இது தற்செயலாகக் கிடைத்தது. திருவருட்பா திருவருட் செயலாகத்தான்

கிடைக்கும். கிடைத்த அப்பொழுதே வெளியிடலாயிற்று. தருமையாதீனத்துத் திங்கள் வெளியீடாகிய ‘ஞான சம்பந்தம்’ இச் சிவஞான தேசிகர் திருவருட்பாவொடு சம்பந்தம் உற்றது. 10-2-1959-இல் வெளிவந்த ‘ஞான சம்பந்தம்’ மலர் 18. இதழ். 3 இல் இப்பெரும்பொருட் சிறுபனுவலை நோக்கி யுணர்ந்திருக் கலாம் அன்பர் பலர்.

இதில் உள்ள திருவிருத்தம் ஒவ்வொன்றும் ஓதுவோர் உள்ளத்தைச் சிவானந்தக் கடலில் முழுக்கித் திளைக்கச் செய்யும் பெருமையுடையது. (‘முழுக்கி’ என்பது முக்கிளன மருவிற்று).

அவ் வாய்ப்பு ஒருசிறிது ‘குமரகுருபரன்’ திருவருள் பெறு வோர்க்கும் எய்தல் வேண்டும் என்று நாடினேன். பத்துக் கட்டுரையில் இதன் பொருளை அடியேன் அறிந்த வண்ணம் எழுத எண்ணம். இம்முதற் கட்டுரையில் காப்பும் முதற் பாடலும் உணர்த்தும் பொருள் அடங்கும். இவற்றை உணர்ந் தால் நம் ஆசையும் அடங்கும். பொறிபுலன்களும் மடங்கும்.

சொக்கநாதன் மதுரையிற் பிட்டுக்கு மண் சுமந்தவன். ‘அந்தி வண்ணன்’ என்பது அவனது திருப்பெயர்களுள் ஒன்று. அவனைப் புகழ்ந்து பாடும் இத்திருவருட் பாவிற்குக் காப்பாகத் தருமையாதீனத்தில் விளங்கும் யானைமுகப் பெருமானை வழிபடு கின்றார் ஆசிரியர். அக்காப்புச் செய்யுள் இது :-

“அவ்வந்தி யீந்திடும் பிட்டினுக் காட்பட்ட ஆண்டகைநற்
செவ்வந்தி மேனியன் சொக்கலிங் கேசனைச் செப்புதற்குப்
பவ்வந் திகழும் அரவணை யான்அயன் பாடிடுஞ்சீர்
ஒவ்வுந் திகழ்தரு மைப்பதி வாரணம் உய்த்திடுமே.”

குறிப்பு :- அ + வந்தி = அவ் வந்தி; அழகிய வந்தியுமாம்; அருளழகு. மதுரையில் வாழ்ந்து உலகெல்லாம் விளங்கிய பிட்டு வாணிச்சியாகிய வந்தி,

“செந்தீயவியுரைவூட்டும் ஈசன் அன்பரின் ஆற்ற
நோற்றதவ நிறைபேறு துய்ப்பாள்.”

என்ற பரஞ்சோதி முனிவர் திருவாக்கால் அந்தணமகள் என்று கூறப்பெறும் பெருமைக்குரியவள். ஆண்டகை ஆயினும்

பிட்டாசையால் வந்திக்கு ஆட்பட்டான். தானே உலகுயிர்களை ஆளுந்தகையன் ஆயினும் வந்திக்கு ஆளாகுந்தகையனுனுன். வந்திக்கு ஆளானவன் செவ்வந்திமேனியன். செவ்வந்தி - செந் நிறத்தையுடைய (மாலை) அந்தி வானம். அந்திபோலும் திரு மேனி. பவ்வம் - பாற்கடல். அரவணையான் - திருமால். தரு மைப்பதிவாரணம் - தருமை(யாதீனத்துப்) பிள்ளையார். இவர் இங்குப் பல இடத்திற் கோயில் கொண்டருளி விளங்குகின்ருர். இக்காப்பு எவ்விடத்துக் குறிப்போ. இனி அறிய நேரலாம்.

முதற் பாடலின் முற்பகுதி

எழுசீராசிரிய விருத்தம்

"கந்தர மேனிச் சுந்தர நினது
கழலிணை அன்பொடு பணியேன்
கருதிய எல்லாம் அளிக்கும்நின் நாமம்
கனிவொடும் உரைத்திடக் கருதேன்
எந்தையே முக்கண் இறைவனே எனநின்
றேத்துவார் இனத்தையே நாடேன்
ஏழையேன் பாசப் பவக்கடல் கடந்தே
ஏறும்நாள் எந்தநாள் அறியேன்"

இது முற்பகுதி. இதிற் கவியின் இயல்பு கூறப்பட்டது.

1) கந்தரம் - மேகம், ஈண்டு வெண்முகிலைக் குறித்தது.

"நீறணிந்த கடவுள் நிறத்தவான்
ஆறணிந்துசென் ருர்கலிமேய்ந்தகிற்
சேறணிந்த முலைத்திரு மங்கைதன்
வீறணிந்தவன் மேனியின் மீண்டதே."

என்ற கம்பர் வாக்கில் வந்தவாறு காண்க. சுந்தரம் - சோம சுந்தரம். [ச: உமாசுந்தரன் = சோமசுந்தரன்]. மீனுட்சிசுந்தரன் என்ற பொருளுடையது அது. கழலிணைப் பணிவு-திருவடிப்பூசை.

2) நாமம் - திருவைந்தெழுத்து. கருதிய எல்லாம் அளிக்கும் ஆற்றல் அதற்கே சொந்தம். அத்தேசிகரது சீட பரம்பரைச் செல்வம் மிக்க சீலஸ்ரீ காசிவாசி அருணந்தி தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திருநாவில் திருவைந் தெழுத்துக் குடி கொண்டு திகழ்கின்றதும் அவ்வுண்மையை உணர்ந்ததன்

பயனே ஆகும். ['சிலஸ்ரீ' என்றதன் பொருள் அருளொழுக்க மாகிய செல்வம் என்பது. சிலஸ்ரீ என்பதை ஸ்ரீலஸ்ரீ எனப் பொருளில்லா வண்ணம் எழுதிக் கொண்டு வந்தனர் பின்னோர். காரியம் பார்ப்பார் என்பது கார்பார் என்று சிதைவுற்றதினும் இதில் வியப்பில்லை.] வடநாட்டிலிருந்து இங்கு வந்த ஒருவர் 108 ஸ்ரீ என்று தம் பெயர் முன் குறிக்கப்பட்டார். அதுபோல, லக்ஷம் ஸ்ரீ என்றார் மகா வித்துவான்களுள் ஒருவர். அது மெய்யாயின் லஸ்ரீ என்று ஈரெழுத்து மட்டும் இருத்தல் வேண்டும். அதன்முன் ஒரு 'ஸ்ரீ' ஏன் இருக்கின்றது? 'சிலஸ்ரீ' என்றலே செவ்விதாகும். லக்ஷம் ஸ்ரீ கோடி ஸ்ரீ யைக் காட்டிலும் குறைந்த தன்றோ? குறைவிலா நிறைவான குருவை ஓர் அள விட்டுக் கூறல் குற்றம் அன்றோ?

3) ஏத்துவார் - அடியர். ஏத்துவாரினம் -அடியர் கூட்டம்.

முதல் மூன்றடியிலும் முறையே (1) சிவபூஜையும் (2) பஞ்சாக்ஷர ஜபமும் (3) அடியார்க்கடிமையும் தமக்கு இல்லை என்றுணர்த்தினர். நாலாவது அடியில், அம்மூன்றும் இல்லா மையால், பிறவிப் பெருங்கடலை நீந்தாமலும், நீந்திப் பேரின்பக் கரையேறாமலும், ஏறி நித்தியாநந்த வாழ்வு வாழாமலும் உள் ளேன் என்பாராய் அப் பவக்கடல் கடந்து முத்தியங்கரையிற் படர்ந்து பேரின்பம் எய்தும் நாள் எந்தநாள் என்று வினவினர்.

இப்பகுதியை மாத்திரம் எப்பொழும் இடைவிடாது சொல்லி வருவோர்க்குச் சிவநெறி யொழுக்கமும் "மிகுசைவத் துறை"யும் நன்கு விளங்கும் என்பது திண்ணம்.

"புறநெறி ஆற்றது அறநெறி போற்றி
நெறிநின் றொழுகுதல் துறையறி மாந்தர்"

கடன் என்று சிதம்பரச் செய்யுட்கோவையின் ஈற்றுப்பாடல் அறிவிக்கின்றது.

'வழிதுறை தெரியாதவன்' என்பது உலக வழக்கு. சைவத் தின் நெறியும் துறையும் தெரியாமல் சிவஞானத்தை அடைய முடியாது. நெறியும் துறையும் தெரிவிக்கவே ஆசாரியர்கள் திருவவதாரம் புரிந்தனர். 'வேதநெறிதழைத் தோங்க மிகு சைவத்துறை விளங்கப் புனிதவாய் மலர்ந்தழுத திருஞான

சம்பந்தர்' திருவுள்ளம்' எங்கே? இப்போதுள்ள சைவமக்கள் உள்ளம் எங்கே?

இம்முதற் பாடல் சைவத்தின் தலையாய ஒழுக்கம் மூன்றனை யும் உணர்த்தி அவற்றை உடையோரே பிறவிப் பெருங்கடல் கடந்து ஏறுவர். ஏனையோர் எக்காலும் ஏறுர். இது முக்காலும் உண்மை எனக் குறித்தவாறு உணர்க. சிவஞான தேசிகர் திருவருளுருவினர். அவர் பாடியருளியது திருவருட்பா. அதில் திருவருளைப் பெறும் வழியே முதற்கண் கூறப்பட்டது.

பிற்பகுதி

"சந்ததம் அமரர் தொழும்தயா நிதியே
சற்குண நந்தவா ரிதியே
சகளநிட் களமா நிறைசுக வடிவே
சாற்றும்ஆ கமமறை முடிவே
சிந்தூர முகிலை இனம்எனக் கருதிச்
செங்கைநீட் டுறும்எழில் மருவும்
சிகரிசேர் தருமை வளர்சொக்க நாதச்
செல்வமே சிற்சுகோ தயமே."

தேவாதி தேவனன கருணாநிதியே, ஆகமாந்தம் ஆயும் வேதாந்தம் ஆயும் விளங்கும் பராபரமே, தருமைச் சொக்க நாதச் செல்வமே, சிவஞானத்தால் எய்தும் பரமசுகமே என்று தம்மால் வழிபடப்பெறும் சொக்கலிங்கத்தை முன்னிலைப்படுத்தி (அழைத்து) முற்பகுதியிற் குறித்த கருத்தை விண்ணப்பித்துக் கொண்டார் ஆசிரியர்.

தருமையின் பெருமைமிக்க வளத்தை 'மேகத்தைப் போலும் தேகத்தையுடைய யானை அம்மேகத்தைத் தன் இனம் என் றெண்ணித் தனது செவ்விய (துதிக்) கையை நீட்டித் தழுவ விழையும் அழகுடையது' என்பதால் குறித்தார்.

சிந்துரம் - யானை. செங்கை - சிவந்தகை அன்று, செவ்வி தானகை; நீண்டகையுமாம். எழில் - அழகு; எழுச்சியுமாம். சிகரி - கோபுரம். மரமுமாம்.

(தொடரும்)

டாக்டர் ஜி. யு. போப் அவர்கள் திருவாசக
மொழி பெயர்ப்பின் வரலாற்றுக் குறிப்புகள்.

# திருவாசகம்

செந்தமிழ்ச் செல்வர், சைவசமய சிரோன்மணி
வித்துவான், பாலூர்
**திரு. கண்ணப்ப முதலியார் M. A., B. O. L., அவர்கள்,**
பேராசிரியர், தமிழ்த்துறைத் தலைவர், புதுக்கல்லூரி, சென்னை - 14.



அமிழ்தினும் இனிய நந்தம் செந்தமிழ் மொழி நம்மவரால் மட்டும் போற்றப்பட்டு வந்திலது. பிறநாட்டவராலும், பிற சமயத்தவராலும் போற்றப்பட்டு வந்துளது. இங்ஙனம் போற்றப் பட்டு வந்தமைக்குக் காரணம், செந்தமிழ் மொழியின்பால் செறிந்து கிடக்கும், அரும்பெருங் கருத்தும், கவினுமே ஆகும். பிற நாட்டவரோ, சமயத்தவரோ செந்தமிழ் மொழியைப் போற்றியதோடு நின்றார்கள் இல்லை. நம்மொழிக்கு அரும் பெருந்தொண்டினையும் புரிந்துள்ளனர். அங்ஙனம் புரிந்தவர் களுள் கிறித்தவநெறியினர்களை ஈண்டுக்குறிப்பிடலாம். கிறித் தவர்களுள் நம் நாட்டவர்களும் உண்டு. மேற்கு நாட்டவர்களும் உண்டு. மேற்கு நாட்டவர்கள் தமிழ் மொழியைத் தாய் மொழி யாகக் கொண்டவர்களும் அல்லர். ஆங்கிலம், ஜர்மன், பிரஞ்சு முதலான தம் தம் மொழியினை தாய் மொழியாகக் கொண்ட வர்கள், இந்நிலையில் அவர்கள் நந்தம் செந்தமிழ் மொழியின் இலக்கண இலக்கியங்களைச் செம்மையாகப் பயின்று, தேர்ந்து, தமிழ்நூல்களில் தம், உள்ளங்களைக் கவர்ந்த சிலநூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தாம் பெற்ற இன்பத்தினைத் தமிழ் மொழியினை அருமை பெருமைகளைத் தம் நாட்டவர், இனத்

---

குறிப்பு :- இக்கட்டுரையில் கண்ட ஆங்கிலப் பகுதிகளில் பக்க எண்கள் சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாகிய Tiruvachagam - English Translation பதிப்பின்படி குறிப்பிடப்பட்டவை.

தவர் அறிய மொழிபெயர்த்துத் தந்துள்ளனர். அங்ஙனம் தந்த மேற்கு நாட்டு அறிஞர்களுள் ஒருவரே, ரெவரண்டு போப்பு அவர்கள்.

போப்பு அவர்கள் ரெவரெண்ட் ஆதலின், போப் ஐயர் என்றும் வழங்கப்பெறுவர். இவர் ஆங்கிலேயர்; தமது சமயத்தைப் பரப்ப இந்தியாவுக்கு வந்தவர். அவர் வந்த காலமாகிய 1839 ஆம் ஆண்டில் நிகழ்ந்த மகாவித்துவான் இமானுஜ கவிராயரிடம் தமிழ் மொழியைப் பயின்ருர். இப்பயிற்சியின் காரணமாக ஆக்ஸ்பர்ட் பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆசிரியராக அமர்த்தப்பட்டார். இவர் நாலடியார், திருக்குறள், ஆகிய இவ்விருநூற்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். தமிழ் இலக்கணத்தை மூன்று பகுதியில் எழுதியுள்ளார். தமிழில் தாம் சுவை எனக்கண்ட செய்யுட்களைத் தொகுத்து 'தமிழ்ச் செய்யுட் கலம்பகம்' என்ற தொகுப்பு நூலையும் செய்துள்ளார். புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை ஆகிய நூல்களில் உள்ள சில செய்யுட்களையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தந்துள்ளார். தமிழ் இலக்கியங்களைப்பற்றி ஆய்வுக் கட்டுரைகள் பலவற்றை Rayal Asiatic Quarterly, The Indian Antiguary, The Indian Magazine and Review முதலான, பத்திரிகைகளில் வெளியிட்டுள்ளார். இவற்ருேடு, அழுது அழுது அரனடிக்கே அன்பு பூண்ட திருவாதவூர் அடிகள் திருவாய் மலர்ந்த திருவாசகத்தையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருப்பதும் நாம் பெரிதும் பாராட்டற்குரியதாகும். கிறித்தவ நெறியினராம் போப் அவர்கள், சிவநெறி நூலாகிய திருவாசகத்தை மொழி பெயர்க்க முன்வந்தனர் என்ருல், அவ்வாசகத்தின் அருமை பெருமைகள் அவர் உள்ளத்தை ஈடுபடச் செய்தன என்பது தெரிகிறது. "அல்லல் அறுத்து ஆநந்தம் ஆக்கியதே" என்றும், "வாதவூர் அண்ணல் மலர்வாய்ப் பிறந்த வாசகத்தேன்" என்றும் பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம் மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே வாசகம்; என்றும் நலமலி வாதவூர் நல்லிசைப் புலவன், மனம் நின்று உருக்கும் "மதுர வாசகம்" என்றும் இந்நூலில் ஈடுபட்ட ஈடும் எடுப்பும் அற்ற இன்தமிழ்ப்புலவர் இசைத்துள்ள இயைபினை

உணர்ந்த போப் அவர்களும் திருவாசகத்தைப் பயின்றபோது, இறவாத இன்ப அன்பை அறிந்து ஆநந்தமுற்றதனுல் இந் நூலை மொழிபெயர்க்க முற்பட்டனர் போலும்! இவர் திருவாச கத்தை மொழி பெயர்த்து வெளியிட்டபோது எண்பதாண்டு நிறைவுற்ற வயதினராக இருந்தனர். இதனை அவரது வாக்கே "I date,this on my eightieth birth day" எனக்கூறுமாற்ருல் தெளிகிறேம். இந்நூலைச் செய்யவேண்டுமென்ற அவா அவருக்கு இருந்தது என்பதை "Still this is a work ought to be done." என்ற அவரதுவாக்கியமே தெளிவாக்குகிறது. போப்அவர் கள், பாலியல் கல்லூரி மாஸ்டர். (Master of Balliol college) தம்மை ஊக்கப்படுத்தித் திருவாசக மொழிபெயர்ப்பை முடிக்கச் சொன்னவிதத்தை நமக்கு அறிவிக்கும் போது "To have a great work in progress is the way to live long. you will live till you finsh it." என்று தம் தோளில் அவர் கைவைத்துக் கூறியதாக எழுதியுள்ளார். இதனுல் போப் அவர் கள் தமது பழுத்த வயதில் வடிவில் இந்நூலை மொழி பெயர்க்கத் தொடங்கினுர் என்பது புலனுகின்றது. திருவாசகத்தைப் படித் தால் விரைவில் விண்ணுலகு புகுவர் என்று நம் நாட்டில் கருதி வரும் கருத்துக்குப் போப் அவர்களின் திருவாசக மொழி பெயர்ப்பு எம்மாருன நிலையில் ஆயுள் வளரும் என்ற உண்மை யைக் காட்டுவன ஈண்டு கூர்ந்து கவனித்தல் வேண்டும்.

(தொடரும்)

---

## போங்கற் புது நாள்

வந்தது பொங்கல் வந்ததுவே வாழ்வு மலர்ந்திட வந்ததுவே
தந்தது இன்பம் தந்ததுவே தாழ்வு பறந்திட தந்ததுவே

வந்தனை செய்வோம் கந்தனையே
வாழ்வினில் பெறுவோம் சுகந்தனையே

சிந்தனை செய்தே வாழ்ந்திடுவோம் சீரும் சிறப்பும் பெற்றிடுவோம்
சிந்தைக்கினிய செந்தமிழை செழிப்புடன் போற்றி வளர்த்திடுவோம்

ஏ. பி. எஸ். மணி,
*29, உஸ்மான் ரோடு; சென்னை - 17.*

# அமுது செய்வித்தல்

**திரு. T. H. விவேகானந்தம் பிள்ளை அவர்கள்,**
அசிஸ்டெண்ட் கமிஷனர், இந்து அறநிலைய இலாகா, சென்னை.



நாம் உண்பது ஒரு நாழியரிசி அன்னமேயானாலும், அவ் ஊண் பலத்திற்கு உலகில் எதுவும் நிகரில்லை. இவ்வளவு முக்கியத்துவம் பெற்றுள்ளதே, பணத்தை நிதியில் போட்டு சேமித்து வைப்பது போல், வயிற்றில் உணவை சேமித்தே வைத்துக் கொள்ளலாமென நினைத்தால் அது சாத்தியப்படுகிற தில்லை.

"ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்
இருநாளுக்கு ஏலென்றால் ஏலாய் — ஒருநாளும்
என்னோவறியாய் இடும்பைகூர் என் வயிறே
உன்னோடு வாழ்தல் அரிது."

என்பது ஔவையார் முதுமொழி. ஆக, தினசரி, ஏன் ஒரு நாளைக்கு குறைந்தது மூன்று முறையாகிலும், பசி தீவினையைத் தணிக்க உணவு வேண்டியிருக்கிறது. மானம் அழியாது வயிறு வளர்க்கைக்கு பல உபாயங்களைத் தேடுகிறோம், கையாளு கிறோம்.

"சேவித்தும் சென்றிரந்தும், தெண்ணீர்கடல் கடந்தும்
பாவித்தும் பாராண்டும், பாட்டிசைத்தும் – போவிப்பம்
பாழின் உடம்பை, வயிற்றின் கொடுமையால்
நாழி அரிசிக்கே நாம்"

விட்டு நெறியிற் செல்லும் பொருட்டு அரிதாகக் கிடைத்த மனித உடம்பினை உணவு தேடுவதிலேயே கழிப்பது அறியாமையாகும். "செவிக்குணவில்லாத போது, சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும்"

என்னும் பொன் மொழியை நடைமுறையில் அமுலுக்கு கொண்டு வருதலில் எவ்வளவு சிரமம் இருக்கிறது என்பதை எல்லோரும் அறிந்து கொள்ளமுடியும். 'We eat to live & not live to eat.'

சித்தத்தை சிவன்பாலே வைத்தவர்கள், இவ்வுடம்புக் கூட்டை, பொய்யான, மெய்யைப், பற்றிக் கவலை கொள்ள மாட்டார்கள். பசி எடுத்தால், கையை நீட்டுவார்கள், கிடைக்-கும் கவளத்தைப் புசிப்பார்கள். கிடைத்திலதேல், உபவாசம். இத்தகையோருடைய 'சிவனுக்குள்ளே, சிவமணம்பூத்து மிளிரும்'. இம்மானுடராக்கை வடிவு சிவலிங்கம்!. இப்பேர்ப்பட்ட மகான்கள் கூட 'உடம்பார் அழியில் உயிரார் அழிவர்' திடம்பட, மெய்ஞ் ஞானஞ் சேரவுமாட்டார். உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்து, உடம்பை வளர்த்து, உயிர் வளர்த்த வேண்டும். பசிநோயினுங் கொடியது பிறிதில்லை. 'பசிவந்திடப் பத்தும் பறந்துபோம்.'

'உண்டிகொடுத்தார் உயிர் கொடுத்தாரே'. "சோறிடும், தண்ணீரும் வாரும், தருமமே சார்பாக, உண்ணீர்மைவீறும் உயர்ந்து." இரப்பவர்களுக்குச் சோறும் தண்ணீரும் அளித் தால் மனம் தூய்மையுற்று விளங்கும் என்பது, தமிழ் மூதாட்டி யார் ஔவையாரின் கூற்று. நலம் சிறந்த 'நல்வழி'யில் இடித் துரைக்கிருள்.

"வையிற் கதிர்வடிவேலோனை வாழ்த்தி, வறிஞர்க்(கு) என்றும்
நொய்யிற் பிளவளவேனும் பகிர்மின்கள், நுங்கட்(கு) இங்ஙன்
வெய்யிற்(கு) ஒதுங்கஉதவா உடம்பின் வெறுநிழல்போல்,
கையிற் பொருளும்உதவாது காணும் கடைவழிக்கே"

என்பது, அருணகிரியாரின் அச்சாணி அன்னதோர், இடித்துரை. "காதற்ற ஊசியும் வாராது காண் கடைவழிக்கே" என்பது பட்டணத்தாரின் பொன்மொழி.

'நொய்யிற் பிளவளவேனும் பகிர்மின்' என்பதில் ஆழ்ந்த, அகன்ற, நுண்ணிய கருத்து புதைந்து கிடக்கிறது. தமிழ் மறையும் "ஆற்றுவாராற்றல் பசியாற்றல், அப்பசியை மாற்று வாராற்றலின் பின்", என்றும், திருமந்திரமும்,

"அகரம் ஆயிரம் அந்தணர்க் கீயிலென்
சிகரம் ஆயிரஞ் செய்துமுடிக் கிலென்

பசுருஞானி பகலூண் பலத்துக்கு
நிகரில்லை என்பது நிச்சயந்தானே"

என்றும் முழங்குகிறது. 'எல்லா தானத்திலும் சிறந்தது அன்ன தானம்' என்பது முக்காலும் மெய்.

அமுது செய்வித்தல் என்பது, 'படமாடுங் கோயிற் பகவற்கும், நடமாடுங் கோயில் நம்பற்கும்.' ஆவும், ஆனியமாக்களுக்குமாம். அமுது செய்வித்தல் யாவர்க்குமாம்.

"யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும்போ தொருகைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கின்னு ரைதானே"

என்பது திருமூலயோகீந்திரர் அருள் வாக்கு. ஓராண்டெல்லாம், எண்ணி எண்ணி, வெளிப்பட்டவாக்கு. ஆனால், 'சிவசிவ' என்றிடாத்தீவினையாளர்கட்கு, இவையெல்லாம் புறம்பு.

"மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன், மதி சூடும் அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல், கண்ணினாலவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல் உண்மையாம்" என்பதை, திருஞானசம்பந்தர், அங்கம் பூம்பாவையை உலகத்தவர் முன் உடலும் உயிரும் பொருந்தவரச் செய்த அற்புதச் செயலிலிருந்து நிரூபிக்கப்பட்டுள்ளது. சிவபெருமான் அளந்து கொடுத்த உணவுப் பொருளாகிய இரு நாழி நெல்லைக் கொண்டு, உலகத்திலுள்ள உயிர்கள் எல்லாம், பசி நீங்கிப் பிழைக்கும் பொருட்டு முப்பத்திரண்டுவகை அறங்களையும் வளர்த்தாள், அன்னை பராசக்தி, தர்மசம்வர்த்தினி, அறம் வளர்த்த நாயகி.

"ஐயன் அளந்தபடியிருநாழி கொண்டண்ட மெல்லாம்,
உய்ய அறம்செய்யும்; அபிராமி யம்மையே".

என்று அபிராமி பட்டர் போற்றும் அருள் வாக்கு சிந்தித்தற்குரியது.

அடியார்கட்கமுது செய்வித்த பெரியார்கள் ஒரு வகை. அண்டர் பிரானுக்கு அமுது செய்வித்த தொண்டர்கள் ஒரு கூட்டம். அடியவர்கட்கு அண்டர்பிரான் அமுது செய்வித்தல் என்பது ஒரு தனிச் சிறப்பு.

அடியார்கட்கு அமுது செய்வித்த பெரியார்கள் :

1. சிறுத்தொண்டர் :- இவர் சிவனடியார்களை நாடோறும், முறைப்படி உபசரித்து, முன்னர்த் திருவமுது ஊட்டிப் பின்னர் தாம் உண்ணும் வழக்கத்தைக் கையாண்டார். இவர் அடியார்களின் முன்னே தம்மை மிகவும் சிறியவராய் வைத்து ஒழுகி வந்தார். ஆதலினால் சிறுத்தொண்டர் என்றழைக்கப்பட்டார்.

"சீதமதி அரவினுடன் செஞ்சடைமேற் செறிவித்த
நாதனடியார் தம்மை நயப்பட்டு வழிபாட்டால்
மேதகையாரவர் முன்புமிகச் சிறியராய் அடைந்தார்
ஆதலினாற் சிறுத்தொண்டர் எனத்திகழ்ந்தார் அவனியின்மேல்."

பயிரவர் வேடத்தில் வந்த சிவபெருமான் விருப்பப்படி, ஒரு குடிக்கு ஒரே மகனாயுள்ள நல்ல சிறுவனை (தன் மகன் சீராளனைத்) தம் முன் உவந்து தாய் பிடிக்க தந்தை அரிந்து குற்றமின்றி சமைக்கப் பெற்ற கறியினைப் படைத்து அமுது செய்வித்து, ஆண்டவனருளைப் பெற்றார். குற்றமற்ற நற்குடியில் பிறந்த இவரது மனைவி திருவெண்காட்டுநங்கை, "தலைவர் பணிதலை நிற்பாராய், செய்யமணியே! சீராளா! வாராய், சிவனார் அடியார்யாம், உய்யும் வகையால் உடனுண்ண அழைக்கின்றார்" என்றோலமிட; பரமர் அருளால் பள்ளியினின்றோடி வருவான்போல்'வந்தான். அம்மையும், அப்பரும்,முருகப்பிரானும் காட்சி கொடுத்து,சிறுத்தொண்டர்,திருவெண்காட்டு நங்கையர், சீராளதேவர், சந்தனத்தாதியர் என்ற நால்வரையும், என்றும் தம்மைப் பிரியாதே வணங்கி இன்புற்றிருக்குமாறு சிவலோகத்துக்குத்தம் முடனே அழைத்துக்கொண்டு சென்றருளினார்கள்.

"வாளால்மகவு அரிந்து ஊட்ட வல்லேன் அல்லன்"

2. அப்பூதிஅடிகள் :- திருநாவுக்கரசரை, நேரிற்பாராமலே, அவர் அறியாமலே, விரும்பி, அவர் திருவடியைப் புகலெனக் கொண்டார். அப்பரே, அவருக்குப் 'பூதி'யாக விளங்கினார். அப்பூதி அடிகளுக்கு, யாவுமே 'திருநாவுக்கரசு' ஆயின.மக்களை மூத்த திருநாவுக் கரசு, இளைய திருநாவுக்கரசு என்றே பெயரிட்டார். தான் ஏற்படுத்திய, தண்ணீர்ப்பந்தல், குளம், யாவற்றிற்குமே திருநாவுக் கரசின் பெயரேயிட்டார்.

கோப்பெருஞ்சோழர், பிசிராந்தையார், நட்புபோல், அப்பூதியடிகளின் அன்பு, ஆளுடைய அரசின் பால், பள்ளத்தில் வெள்ளம் விழுவதுபோல், பெருகியது.

"புணர்ச்சி பழகுதல்வேண்டா; உணர்ச்சிதான்
நட்பாம் கிழமைதரும்."

என்னும் பொய்யாமொழிக்கு எடுத்துக்காட்டு அப்பூதியடிகளே. ஒரு சமயம், அப்பரும் அப்பூதியடிகளும் சந்தித்தனர். அப்பூதியடிகள், தன் இல்லத்தில், திருவமுது செய்ய வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். அப்பரும் ஒப்பினர். மகிழ்ந்து அறுசுவையுடன்,அப்பூதியடிகளின் மனைவியார், அமுது சமைத்தனர். மூத்த திருநாவுக்கரசைஅழைத்து வாழைக்குருத்து அரிந்துவர கட்டளையிட்டார். மைந்தனும், ஓடோடியும் சென்று, தோட்டத்திலுள்ள வாழையின் குருத்தை அரிந்தான். அரியும்போதுபாம்பு ஒன்று, அவன் அங்கையில் தீண்டிக் கையினில் சுற்றிக்கொண்டது.

சீற்றங் கொண்ட அப்பாம்பை கீழே உதறித் தள்ளிவிட்டு, "இத்தீயவிடத்தின் வேகத்தால் நான் கீழேவிழுமுன்னர் அரிந்த இக்குருத்தினைச் சென்று கொடுப்பேன்" என்றுவிடத்தின் வேகம் பின்னுற மிகவேகமாக ஓடிவரும்போது, "பாம்பு தீண்டிய செய்தியினைத் திருநாவுக்கரசர் திருவமுது செய்வதற்கு இடையூறுகும்படி நான் யாரிடமும் சொல்லமாட்டேன்" என்று உறுதிகொண்டு மனையினுட் புகுந்தான். இம்மாதிரி கீழ்ப்படியும் தன்மை, கடமையின் உணர்ச்சி (Sense of duty) அதிதிகளிடம் உள்ளன்பு, இக்காலத்துப் பிள்ளைகளிடம் காணமுடியுமா?

விஷம், (ஏழாம் வேகம்) தலைக்கேறியது. உயிர் நீங்கும் நிலைவந்ததும், வாழைக்குருத்தினை விடாமற் கொண்டு, தன் தாயார் கையில் கொடுத்துவிட்டுக் கீழே வீழ்ந்தான். வீழ்ந்த மகனை, அப்பூதியடிகளும், அவர் மனைவியாரும், உற்றுநோக்கி, உடலின் குறிகளையும் கண்டு, 'விடம்தீண்டியதனுல் இறந்தான்' என்னும் துணிவு கொண்டனர். ஆயினும், மனக்கலக்கங் கொள்ளாது, திருநாவுக்கரசர் திருவமுது செய்வதற்குரிய உபாயத்தை எண்ணினர் தாய்தந்தையர். அருமருந்தன்ன, புதல்வனை பாயினுள் வைத்து மூடி, வீட்டில் ஓரிடத்தில் மறைத்து வைத்துவிட்டு, இந்நிகழ்ச்சியை யாருக்கும் தெரிவித்துக் கொள்

ளாமல், இன்னடிசில், கறியமுது முதலியவற்றை அமைத்து வைத்துக்கொண்டு, அப்பூதியடிகள், திருநாவுக்கரசர் முன்வந்து வணங்கி, "அமுது செய்து, எங்குடி முழுதுய்யக் கொள்வீர்" என வேண்டினர். திருநாவுக்கரசரும், இணங்கி, அமுது செய்யு முன், அப்பூதியடிகட்கும், அவர் மனைவியாருக்கும் திருநீற்றினை அளித்து, ஏனை புதல்வர்க்கும் அளிக்கும் போது, "இவருக்கு மூத்த பிள்ளையையும் திருநீறு சாத்துதற்குக் காட்டு வீராக!" என்றார். அதனைக் கேட்ட அப்பூதியடிகள் நிகழ்ந்த செயல்கள் ஒன்றும் உரையாமல், "இப்போது இங்கு அவன் உதவான்" என்றனர்.

அம்மொழி அப்பருக்கு தடுமாற்றத்தை உண்டாக்கியது. உண்மையை விளம்பும்படி கேட்டுக் கொண்டார். பொய்கூற லாகாது என்று முடிவு செய்து, அப்பூதியடிகள் நிகழ்ந்ததைக் கூறிவிட்டார். திகைப்புற்ற அப்பர், இறைவனருளைச் சிந்தித்த வராய், உயிர் நீங்கிய அப்பிள்ளையின் சடலத்தினைக் கோயிலின் முன் கொண்டுவரச் செய்து, "ஒன்று கோலாம்" என்று தொடங்-கும் திருப்பதிகம் பாடிப் பாம்பின் விடத்தைப் போக்கியருளினர். சேயும், உறக்கம் நீங்கி, விரைந்தெழுவானைப் போன்று எழுந்து அப்பருடைய திருவடிகளை வணங்கினன். அப்பரும் அவனுக்குத் திருநீறு அளித்தார்.' "பிரிவுறும் ஆவிபெற்ற பிள்ளையைக் காண்பார் தொண்டின் நெறியினைப் போற்றி வாழ்ந்தார்." ஆனல் அப்பூதியடிகளும் அவர் மனைவியாரும் "இவன் அறிதற்கரிய பெருமையுடைய அன்பர் திருவமுது செய்தருளு தற்குச் சிறிது இடையூறு செய்தான்" என்று சிந்தை நொந்தார். என்னே, இவர்கள் அமுது செய்து வைக்கும், அன்பு!

"மைந்தரும் மறையோர் தாமும் மருங்கிருந் தமுதுசெய்யச்
சிந்தைமிக்கில்ல மாதர் திருவமுதெடுத்து நல்கக்
கொந்தவிழ்க் கொன்றை வேணிக் கூத்தனர் அடியாரோடும்
அந்தமிழாளியார் அங்கமுது செய்தருளினரே."

"தோடை வாழை மேன்மடவாரல்குற் பாம்புதோட மயங்கி
நடைவாய்பிண மெனப்பட்டார் பெறுகிலர் – நச்சுக்குலை
யுடைவாழை மேல்உரகந்தீண்ட மாய்ந்த வொருவனுயி
ரடைவான குள்புரியுந் திருநாவுக்கரசினையே."–நால்வர் நான்மணிமாலை.

"ஒருநம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்"

அண்டர் பிரானுக்கு அமுது செய்வித்த அடியார்கள் :-

கண்ணப்பர் : கன்னிவேட்டைக்குச் சென்ற, திண்ணனூர், காளத்தி மலையில், திங்களணிந்த சடையாரைக் காணுமுன்னே, அவரது திருவருள் நோக்கம் பெற்றார். பிறப்பின்பழ வினைத் தொடர்பை அகன்றார். பேரொளியின் நிழலிலே அன்புருவம் பெற்றார். காளத்தியப்பரைக் கண்டதும், ஆசை பொங்க ஓடினார். தழுவினார். உச்சிமோந்தார். ஆனந்தக் கண்ணீர் பெருக்கினார். "ஐயோ! கொடிய மிருகங்கள் வாழும் காட்டில் வேடரைப் போல் துணையின்றி, நீர்மாத்திரம் தனித்திருப்பது தகுமோ?" என்று மனம் வருந்தினார். "இவர் தமக்கு அமுது செய்ய இறைச்சியும் இடுவாரில்லை" என்செய்கேன் என்று ஏங்கினார்.

" திருக்காளத்திமலை, எழுகொழுந்தாயுள்ள ஏகநாயகரை," விட்டகலமனமில்லாது, தத்தளித்தார். இறுதியில், " நாதனே! அமுது செய்ய நல்ல மெல் இறைச்சி நானே கோதறத் தெரிந்து வேறு கொண்டு இங்குவருவேன் " எனச் சொல்லி வில்லும் அம்பும் கையில் எடுத்துக்கொண்டு குடுமித்தேவரை வணங்கி, இறைச்சி கொண்டுவரப் புறப்பட்டார். இவனுடன் வந்த நாணன் பின்தொடர, பொன்முகலி ஆற்றங்கரையிலுள்ளமலர்ச்சோலையை அடைந்தார். கீழேயே தங்கியிருந்தகாடன், திண்ணனூரை வணங்கி " தாங்கள் விரும்பியபடியே நான் தீக்கடைந்து வைத்திருக்கிறேன், பன்றியின் உறுப்புகளையெல்லாம், உங்கள் அடையாளத்தின்படி சரிபார்த்துக் கொள்ளுங்கள் "என்று பகர்ந்தான். திண்ணனூர்,ஒருவர் முகத்தையும் பாராது, வினுக்களுக்கு ஒன்றும் பதில் கூறாது, பன்றியின் இறைச்சியை நெருப்பில் வதக்கினார். நல்ல தசைப் பகுதிகளை வேறுவேறாக அரிந்து கோலில் கோத்துக் காய்ச்சி, பக்குவமாகவேகவைத்து நல்ல சுவைப் பகுதியை அறியும் பொருட்டு, வாயில் போட்டு அதுக்கிப்பார்த்தார் ; சுவையுள்ள இறைச்சிகளை வாயிலிருந்து எடுத்து சேமித்து வைத்தார். பிறகு எம்பெருமானுக்கு அமுதூட்ட, இவ்விறைச்சிகளை முதிர்ந்த தேக்கு இலைகளால் இணைக்கப்பட்ட கல்லையில் அமைத்துக் கொண்டார், திருமஞ்சனமாட்ட எண்ணிப்பொன் முகலி ஆற்று நீரைத் தம் வாயில் முகர்ந்து கொண்டார். தூயபூ,

இலைகளைப் பறித்துத் தமது குடுமி மேல் சொருகிவைத்துக் கொண்டார்.

இறைவர் பசித்திருப்பாரே என்று எண்ணி விரைந்து மலை மேல் ஏறிச்சென்றார். எம்பெருமானது திருமுடியில் முன்னர் சாத்தப்பட்டிருந்த மலர்களைத் தம் செருப்புக்காலால் கீழே தள்ளினார். தம் உள்ளத்தில் இடம் போதாது பொங்கி எழும் அன்பினை உமிழ்பவர்போல் வாய்நிறையக் கொண்டு வந்திருந்த திருமஞ்சன நீரைத் திருக்காளத்தி நாதரின் திருமுடிமேல் கொட்டினார். தமது தலையில் வைத்திருந்த மலர்களை எடுத்து இறைவர் திருமுடியில் வணங்கிச் சாத்தினார். கல்லையில் கொண்டு வந்திருந்த இறைச்சியைத் திருவமுது செய்யும்படி, குடுமித்தேவர் முன்வைத்து, "தேவரீர் இதனைத் திருவமுது செய்ய வேண்டும்" என்று கூறி ஊட்டினார். இரவு வந்தது. கையில் வில்லும் அம்பும் கொண்டு காளத்திநாதன் பக்கத்தில் நின்று இரவு முழுவதும் காவல் புரிந்தார்.

திருக்காளத்திநாதருக்கு தினந்தோறும் வழிபாடு செய்து வந்த, சிவகோசரியர், மறுநாட்காலை, இந்த அனுசிதத்தைக் கண்டார். திடுக்கிட்டார். அதற்குரிய பிராயச்சித்தம் செய்தார். பிறகு முறைப்படி பூசைகளைச் செய்து முடித்தார்.

பொழுது புலர்ந்ததும், மலையை விட்டிறங்கிய திண்ணனார், ஒரு பெரிய பன்றியைக் கொன்றார். இன்னும் மான், மரை, கடமை முதலிய மிருகங்களையும் கொன்றார். இவைகளையெல்லாம் சேமித்து, தீ உண்டாக்கி, பக்குவமாக வதக்கி எடுத்தார். வாயில் போட்டு, சுவை பார்த்து, எம்பெருமானுக்கேற்ற இறைச்சிகளைத் தேர்ந்தெடுத்து, தேனைக்கலந்து, முன்போல், இறைச்சி, மலர்கள், நீர் இவைகளைத் தாங்கி, விரைந்து காளத்தியப்பரை அடைத்தார். "அடியேன் சுவைகண்டு, தேனும் உடன் கலந்து கொணர்ந்துள்ளேன்" எனச்சொல்லி, குடுமித்தேவரை திருவமுது செய்வித்தார். இரவு முழுதும் காளத்திநாதர் திருமுன் துயிலாது நின்று கொண்டிருப்பார். இவ்வாறு நாடோறும், திருவமுது செய்வித்து, காவல் புரிந்து வழிபட்டு வந்தார்.

(தொடரும்)

# வெல்லமும் சர்க்கரையும்

வித்துவான், பொன் முருகையன் அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, பனசை.

குழந்தைகள் முதல் முதியோர் வரை இனிப்புப் பொருள் களை ஒதுக்குவார் யாரும் இல்லை. சுவைகள் ஆறு வகைப்படும் அவையாவன :— இனிப்பு, கைப்பு, உவர்ப்பு, புளிப்பு, கார்ப்பு, துவர்ப்பு. அவற்றுள் இனிப்பு - தித்திப்பு என்ற பெயரொடு வழங்கி வருகிறது. தித்திப்பு என்றவுடனே நாக்கில் ஜலம் ஊறுதல் உண்மை. நம் நாட்டில் தித்திப்புச் சுவையை உண் டாக்கப் பயன்படும் பொருள்கள் வெல்லம், சர்க்கரை, கரும்பு, பழவகைகள் முதலியன. அவற்றுள் வெல்லம் முதல் சர்க்கரை ஈருக உள்ள பொருள்களின் வரலாற்றை ஆராய்வோம்.

வெல்லம் கரும்பிலிருந்து சாறு பிழிந்து, காய்ச்சித் தயாரிக் கப்படுவதோர் இனிப்புப் பொருள். தொடக்கத்தில் இதற்குப் பாகு என்றே பெயர். பிறகு கட்டி என்ற பெயரைப் பெற்றது. நாளடைவில் வெல்லக்கட்டி என்று வழங்கலாயிற்று. இதனை "பாகு படு நெட்டிலைக் கன்னல்" என்ற முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ் அடியாலும் "கடுத்தின்னுதானைக் கட்டி பூசி கடுத்தீற்றியவானும்" என்ற களவியலுரையாலும் நாம் அறியலாம்.

### கரும்பின் சிறப்பு :

இனி வெல்லம் தோற்றுதற்கு இருப்பிடமாக விளங்குவது கரும்பு ஆகும். கரும்பு பயிரிடப் படுவதற்குத் தக்க நிலம் நன்செய் நிலமாகும். நல்ல நீர் வளமும் நில வளமும் கரும்பின் செழிப்பிற்குத் துணைக்காரணங்களாகும். கரும்புப் பயிர் சுமார் 4½ அடி முதல் எட்டு அடிவரை செழித்து வளரும். கரும்பு,

சிறப்பு வகையால் பலவாகும். மூன்று கோடுகள் உள்ளது ராம கரும்பு என்று வழங்கப்படும். கருநிறமாய் தடித்துக் காணப் படும் கரும்பு பன்னி கரும்பு என்று பெயர் பெறும். (வேழக் கரும்பு – இருபெயரொட்டுப் பண்புத் தொகை – தொல், சொல் சேனுவரையம்) ஆலைகளில் சாறு பிழியப் பயன் படுவது ஆலைக் கரும்பு என்று பெயர் பெறும். நம் நாட்டையடுத்த ஜாவா நாட்டில் கரும்பு பயிராவதற்கேற்ற மண்வளம் உடைய பல இடங்கள் உண்டு. எனவே அங்கிருந்து உயர்ந்த ருசியுள்ள சர்க்கரை வெளிநாடுகளுக்கு ஏற்று மதியாகிறது. கரும்பு தின்னக்கூலியா என்று கேட்பார் பலருண்டு. நம் நாட்டில் பன்னெடுங் காலமாகப் பயிரிப்படும் ஒரு பயிர்வகை கரும்பு என்பதற்குச் சங்க இலக்கியங்களும் பிற்கால நூல்களும் சான்ருகும். இதனை,

"கரும்பு நடுபாத்தியில் கலித்த ஆம்பல்
சுரும்பு பசிகளையும்."

என்ற அடியாலும்,

"கரும்பு அயிறற்கு கூலி போல"

என்ற பரிமேலழகருரையாலும் நாம் அறியலாம்.

"வான் கரும்பே தொண்டை வளநாடு
வான் கரும்பின் சாறே அந் நாட்டுத்தலையூர்கள்
சாறட்ட கட்டியே கச்சிப்புற மெல்லாம்
கட்டியுட் டானேற்றமான சருக்கரை."

என்ற யாப்பருக்கலக்காரிகை மேற்கோள் பாடலிலிருந்து கரும்பும், சாறும், வெல்லக்கட்டியும், சருக்கரையும் ஆகிய முறைமை நன்கு விளங்குகிறது.

**சர்க்கரையின் தோற்றம்**

இவ்வாருக கரும்பைச் சாறு பிழிந்து, உலையிலிட்டுக் காய்ச்சி, வெல்லம் தயாரித்தார்கள். உதிரியாகக் கிடைப்பது சர்க்கரையாக வழங்கி வந்தது. பிற்காலத்தில் நாகரீகத்தின் பயனுக ரசாயனப் பொருள்களைச் சேர்த்து சர்க்கரையின் மஞ்சள் நிறத்தைப் போக்கிச் சுத்தம் செய்து வெள்ளைச் சருக்கரையாக

(ஜினி) மாற்றினுர்கள். வெள்ளைச் சருக்கரையாக மாற்றப் பட்டது போக எஞ்சிய கழிவுப் பொருள்கள் குழைவு ஜீனியாக வழங்கி வருகிறது. இடைக்காலத்தில் யுத்த நெருக்கடி காலத் தில் இதனையும் சுத்தம் செய்து பூரா ஜீனி என்ற பெயருடன் விற்பனை செய்து வந்தார்கள்.

### ஜீனி (Sugar – சுகர்) வேறுபெயர்கள்

இதனை நாம் ஜீனி என்றே வழங்கி வருகிறோம். சில இடங் களில் அஸ்கா என்று பெயர் பெறுகிறது. உருது பாஷையில் நவாத்து என்ற பெயரும் வழங்கி வருகிறது. அல்லது ஆங்கிலம் தெரிந்தவர்கள் சுகர் என்றே வழங்கி வருகிறுர்கள்.

(மதுரையில் தடாதகாதேவியின் திருமணத்திற்கு வந்தி ருந்த முனிவர்களில் மேற்கண்ட சுகர் - என்பவரும் ஒருவர் - என திருவிளையாடற் புராணம் கூறுகிறது. எனவே இவர் (சுகர் - சர்க்கரை) இல்லாமல் திருமணம் நடைபெறுது என்பது நிச்சயம்).

வெல்லப்பாகை அச்சுகளில் ஊற்றி அச்சு வெல்லமாக்கிக் கடைகளில் வியாபாரம் செய்கிறுர்கள். இவ்வாறு கரும்பிலிருந்து தயாரிக்கப்பட்ட வெல்லம், அச்சு வெல்லம், ஜீனி இவற்றைக் கொண்டு பலவித இனிப்புப் பொருள்கள் தயாரிக்கப் படுகின்றன விசேட நாட்களிலும் பொங்கல் விழாக்களிலும் பெருவாரியாய் பயன்படுகிறது.

வெல்லத்தின் இனிப்புப் பொருள் இருப்பது போலவே உறுதிப் பொருளும் கலந்து இருக்கிறது. பெரிய கட்டிடங் களுக்கு அஸ்திவாரம் இட்டு சுவர் எழுப்புகையில் வெல்லம் கலந்த நீரைத்தெளிப்பார்கள். காரணம் சுவர் உறுதியடைய வேண்டி. எனவே சோற்றுலடித்த சுவராகிய நம்முடம்பு நற்கதி பெற வெல்லத்தால் செய்யப்பட்ட பொங்கலை பொங்கல் நன்னுளில் உண்டு அறம், பொருள், இன்பம், வீடு என்ற உறுதிப் பொருளை அடைய ஆண்டவன் அருள் கிட்டட்டும்.

---



# "பற்று"

திருமதி. இரோ. இந்திரா அவர்கள்
*வித்துவான் இரண்டாம் யாண்டு, செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.*

—ooo—

ஒவ்வொரு மனிதனும் பிறருடன் பேசும் போதோ அல்லது பிறரைக் காணும் போதோ ஒரு பொருளைப்பற்றி நிற்றல் (சார்ந்து நிற்றல்) வழக்கமாகும். இதுபோன்ற வழக்கி லுள்ள பழக்கங்களை ஒரு கவிஞன் தன் கவிதையில் காட்டினுல் அது மகிழ்ச்சி தரும் சிறந்த கவிதையாக இலங்கும்.

சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியின் செவிலித் தாயாகிய காவற்பெண்டு என்னும் பெண்பாற் புலவர், புற நானூற்றில் 56-ஆம் செய்யுள் பாடியுள்ளார். அச்செய்யுள்,

"சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்
யாண்டுளனே என வினவுதி என்மகன்
யாண்டுள ளாயினும் அறியேன் ஒரும்
புலி சேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே." என்பது.

இதில் பற்றிப் பேசும் பழக்கத்தைப் புலவர் காட்டியிருப்பது காணத்தக்கது. நின்மகன் யாண்டுளன்? என வினவுவார் சிற்றில் நற்றூண் பற்றி வினவியதாகக் கூறப்பட்டுள்ளது.

போந்தைப் பசலையார் என்பவர் ஒரு பெண்பாற் புலவர். அகநானூற்றில் 110-ஆம் பாடல் இவர் பாடியதே. அதில் பற்றி நிற்றலை இப்புலவர் குறிக்கின்றார். அப்பகுதி,

"யான் பெயர் கென்ன நோக்கித் தான்தன்
நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி
நின்றோன் போலும் இன்று மென்கட்கே." என்பது.

தலைவன் தேரேறிச் சென்றான்; என்னை குறித்த நோக்க மொடு சென்றான் எனக் கூற வந்த தோழி கொடிஞ்சி பற்றி நின்றான் என்றது பற்றி நிற்றல் பழக்கத்தைக் காட்டுகிறது.

உலகில் நடக்கும் ஒன்றைத் தன் கவிதை நாயகன் மேல் வைத்துக் கூறிச் சுவை தந்த பெருமை இவ்விரு புலவர்க்கும் ஏற்படுகின்றது. ஈண்டு ஒரு செய்தி நோக்க வேண்டும். மேற் கூறிய இரண்டு பாடல்களையும் பாடியோர் பெண்பாற் புலவரே. பெண்கள் நாணத்தால் எதிரில் உள்ள பொருள்களைப் பற்றிப் பேசுதல் பழக்கம். இதைப் பெண்பாற் புலவரே அனுபவத்தால் கூறியது மிகச்சிறப்பாக அமைந்துள்ளது. அதனால் அவர் நாணுத் திறமும் புலனும்.

சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் என்னும் புலவர் பெருமான் உரைவாயிலாகப் பற்று என்பது வாரப்பாடல் என்று உணரலாம். ஊர் காண் காதையில் "வாரம் பாடும் தோரிய மடந்தையும்" (155) என்பதற்கு அடியார்க்கு நல்லார், "வாரமாவது பற்று. அஃது இருவகைப்படும். ஓரொற்று வாரம், ஈரொற்று வாரம் என. அவை தாளத்திற்கு ஒரு மாத்திரையும் இரண்டு மாத்திரையும் பெற்று வருமெனக் கொள்க," என உரை கண்டார். இதனால் அக்காலத்துப் பற்று என்பது வாரப்பாடல் என்னும் பொருளில் வழங்கியுள்ளது.

சிலம்பில் அரங்கேற்று காதையில்,

"கொட்டிரண் டுடையதோர் மண்டலமாகக்
கட்டிய மண்டலம் பதினொன்று போக்கி
வந்த முறையின் வழிமுறை வழாமல்."

என்னும் பகுதிக்கு "ஒரு தாளத்திற்கு இரண்டு பற்றாகப் பஞ்ச தாளப் பிரபந்தமாகக் கட்டப்பட்ட தேசி யொத்தை ஒரு தாளத் திற்கு இரண்டு பற்றாகப் பத்தும், தீர்வு ஒன்றுமாகப் பதினொரு பற்றாலே தேசிய கூத்தை ஆடிமுடித்தென்க." என அடியார்க்கு நல்லார் உரை கண்டார். இதில் ஒரு தாளத்திற்கு இரண்டு பற்று என்பதால், பற்று என்பது தாளத்தின் உட்பிரிவு என்னும் பொருளில் வழங்கியது எனக் கொள்ளலாம், தீர்வு=முடிப்பு.

பற்று என்ற சொல்லை இவறன்மை (உலோபம்) என்னும் பொருளில் வள்ளுவர் எடுத்தாண்டுள்ளார்.

"பற்றுள்ளம் என்னும் இவறன்மை யெற்றுள்ளம்
எண்ணப் படுவ தொன்றன்று."

என்பதக் குறள்.

பரஞ்சோதி முனிவர் திருமணப் படத்தில் பற்றல் என்பதை மணத்தல் என்ற பொருளில் எடுத்தாண்டுள்ளார். சிவபெருமான் தடாதகைப் பிராட்டியை மணமணி மண்டபத்து செங்கை பற்றினன். அதைக் கூறுகையில் பரஞ்சோதியின் கவிக்கூற்று அமைகின்றது. 'பற்றினன் பற்றிலார்க்கே வீடருள் பரமயோகி' என்பது அது. இதில் "யோகி பற்றினன்" எனப் பற்றிய செய்தி கூறி "மங்கையோடிருந்து யோகு செய்வானை" என்ற திருவாக்கை நினைவு படுத்துகின்றார்.

பற்று என்ற சொல் கேட்டவுடன் எல்லோர்க்கும் ஒரு குறள் நினைவில் தோன்றும்.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

என்பது அது. சைவ சமய சித்தாந்த சாத்திரங்களுள் திருக் களிற்றுப் படியார் என்பதொன்று. அதில் 31-ஆம் செய்யுள் பற்று என்னும் சொல்லை உலக ஆசை என்னும் பொருளில் எடுத்தாளுகின்றது.

"பற்றினுட் பற்றை விலக்கி துடைப்பதொரு பற்றறிந்து
பற்றி பிரிந்திருந்து பார்க்கின்ற—பற்றதனைப்
பற்றுவிடில் அந்நிலையே தானே பரமாகும்
அற்றமிது சொன்னேன் அறி."

என்பது. இத் திருவாக்கே எல்லோரையும் உய்விக்கும் பெரு வாக்காகும்.

இவ்வாறு இலக்கியங்கள் பற்று என்ற சொல்லை வாரப் பாடல் என்ற பொருளிலும், இவறன்மை என்ற பொருளிலும் வழங்கியிருக்கின்றது. தாளத்தின் ஒரு பிரிவுக்குக் கூட அக் காலத்து இப்பெயர் வழங்கி இருந்திருக்கின்றது. சங்க இலக் கியம் பற்றிப் பேசல், பற்றி நிற்றல் போன்ற நடை முறைச் செய்திகளை நயம்படக் கூறி மகிழ்விக்கின்றது.

---

# பல்லாண்டு வாழ்க

திரு. சு. கு. சம்பந்தமூர்த்தி அவர்கள்,
கும்பகோணம்.

சீரார் செந்திற் சிவசுதன் றன்னை
நேராக் கண்டரு ணிலவுறு மாதவன்
ஐந்துறு மாண்டினின் மூகை தவிர்ந்து
கந்தர் கலிவெண் பாவருள் கவிஞன்
தமிழ்தனி லொழுகுஞ் சுவையெனத் தடாதகைக்
கமிழ்தமு ஞெழுகுந் தமிழொன் றளித்தும்
பொருவரு மதுரைக் கலம்பகம் புனைந்தும்
இருமணி மாலையோ டொருகுற மியம்பியும்
அம்மைமுன் ரேன்றி யணியு முத்தாரம்
செம்மையிற் பெற்றுந் திருமலை மன்னன்
வேண்டிட நீதி நெறிதனை விளக்கியும்
ஆண்டிடுந் தருமை யாதீனத் தமர்
மாசின் மாமணித் தேசிகர் தம்பாற்
காசின் ஞானங் கைவரப் பெற்றும்
பண்டார மும்மணிக் கோவை பகர்ந்தும்
கண்டார் கதியுறுங் கமலை நான்மணி
மாலை மொழிந்தும் வேளூர் பணிந்தும்
ஏல வார்குழ லுயகி யீன்ற
முத்துக் குமார சாமி தனக்கொரு
தித்திக் குமாறுபிள் ளைத்தமிழ் செய்தும்
மின்றங்கு தாமரை யொக்குஞ் சிதம்பரம்
என்றங் கியம்பி யின்னருள் பெற்றும்
தில்லைச் சிதம்பரச் செய்யுண் மும்மணி
எல்லையில் கோவையு மிமவான் மகட்கு
இருமணி மாலை யெழிலுறக் கோர்த்தும்
புருவ நடுவெனும் பொற்புறுங் காசி
நண்ணியப் பதிதனி னற்றமிழ் பரப்பியும்
புண்ணியம் பற்பல புரிந்தவண் வைகி
சகல கலைக்கொடி தனக்கொரு மாலை

புகலவும் பிறமொழி புகரற வுணர்ந்தும்
சீயந் தனையுகந் தேறி யிறைமுக
லாயன் றனதர சவையி னண்ணலும்
மன்னிய வயமா வூர்ந்து வருமவர்
தன்னையுள் வெருவித் தாளிணை பணிந்தே
அத்தகு நிருப னளித்திடு நிதியால்
சத்திர மடங்களுந் தான தருமமும்
கேதா ரத்துறை கேதார மந்திரம்
ஆதா ரத்துட னமைதரச் செய்தும்
சிவப்பிர காசர்க்குச் செம்பொரு ளிலக்கணம்
உவப்புட னருளுறு மொளிதிகழ் வெள்ளி
அம்பல வாணத் தம்பிரா னுதி
ஐம்புல னெறிசெலா தவர்குரு வாகியும்
காசிக் கலம்பகங் கவினுறச் செய்துவை
காசியி னிறைமதிப் பின்வருந் திருத்தியை
தன்னிற் சிவத்தொடு தானறக் கலந்து
முன்னுங் குமர குருபர முனிவரன்
திருவடி தினமுந் தொழுதெழு மரபினில்
இருபதின் பதவியி லிலகுறு மேந்தல்
காண்பினுங் கேட்பினுங் கருதினுந் திதிக்கும்
மாண்புறு சிவன்பெயர் மன்னிடு மன்னன்
நல்லறம் புரிதலே நியமமாய் நாளும்
பல்லறம் புரிந்திடும் பண்பின் மிக்கவன்
புன்மையேன் புகன்ற புன்சொலே யெனினும்
நன்மையாக் கொண்டரு ளல்கிடு நாதன்
அத்தகை யிறைவ னருளினிற் றேன்றி
இத்தினம் பன்னிரண் டெய்துறு மாண்டினில்
புத்தொளி வீசிப் பொங்க னன்னுளில்
கைத்தலத் தமருங் கவினுறு குமர
குருபரன் வாழ்க குவலய மெல்லாம்
பரவுறு மியல்பொடும் பல்லாண்டு வாழ்க.

"கருச்சந்தில் வாராது காத்துநமை யாளும்
திருச்செந்தி லாண்டவன் திருவடி வாழ்க."

திருச்சிற்றம்பலம்

## 1136-ம் ௵ ஐப்பசி, கார்த்திகை மாதங்களில்
## கலைக்கோவிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 8515 | சிவஞான தீபம் | சிவயோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் |
| 8516 | ஸ்ரீ சிவாக்கிரயோகிகள் ஆதீன வரலாறு (குருபூஜை வெளியீடு 1959) | தொகுப்பாசிரியர்:வித்வான் செ. இராசு அவர்கள் |
| 8517 to 18 | சிவபூசா விதி | ச. குமாரசுவாமிக் குருக்கள் |
| 8519 | விநாயகர் வரலாறும் தோத்திரப் பாடல்களும் | கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார் |
| 8520 | " 108 உபநிஷத்துக்களின் ஸாரம் " | சிதம்பரம் C. S. ஸச்சிதானந்த தீக்ஷிதர் |
| 8521 & 22 | ' அன்பே சிவம் ' | பதிப்பாசிரியர் வரகவி திரு. அ. சுப்பிரமணிய [பாரதி |
| 8523 | திருப்பூவணம், கந்தசாமிப் புலவர் இயற்றிய திருப்பூவண நாதருலா | தியாகராஜவிலாச வெளியீடு |
| 8524 | மதராஸ், ஹிந்துமத தர்மஸ்தாபன பரிபாலனச்சட்டம் [1951-வது வருஷத்து 19-வது சட்டம்] | R. கிருஷ்ணமாச்சாரி B. A., B. L., |
| 8525 | திருவாசக சிவபுராணம் (மூலமும் உரையும்) | தொகுத்தோர் சபா. சிவப்பிரகாசம் பிள்ளை |
| 8526 | காரைக் காளத்தி விநாயகர் கிள்ளை விடுதூது | வீரை. கவி. ந. நெல்லையப்பன் செட்டியார் |
| 8527 | ஸ்ரீ மௌனகுரு ஞானதேசிகர் தோத்திரக் கொத்து | ஸ்ரீ மௌன தேசிகர் மடாலய வெளியீடு |
| 8528 | இலை விபூதி மகிமை | டாக்டர் A. G. கோமதிஅம்மாள் |
| 8529 | திருச்செந்தில் வெண்பா வந்தாதி | அ. சிவாநந்த சாகரயோகீச்வரர் |
| 8530 | சிவஞானபோத மூலமும் உரையும் | சைவசித்தாந்த சபை, தூத்துக்குடி |
| 8531 | ஸ்ரீலஸ்ரீ காசிவாசி, சாமிநாத ஸ்வாமிகள் அவர்கள் வரலாறும், கூத்தர்கலிவெண்பா முதலியனவும் | காசிமடம், திருப்பனந்தாள் |

| | | |
|---|---|---|
| 8532 | நால்வர் கூறிய நல்உபதேசங்கள் | வித்வான் பாலூர். து. கண்ணப்ப முதலியார் |
| 8533 | காசிவாசி அருணந்தி அடிகள் நான்மணிமாலை | ஆசிராமம் சு. பாலசுப்பிரமணிய பிள்ளை அவர் [களின் மக்கள் |
| 8534 | மூவர் தேவாரத்திரட்டு | திருப்பனந்தாள்-செந்தமிழ்க் கல்லூரி வெளியீடு |
| 8535 | திருவுத்தர கோசமங்கை மங்களேசுவரி பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | தியாகராச விலாச வெளியீடு |
| 8536 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் (மூலம்) | ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள் |
| 8537 | சகலகலாவல்லிமாலை (உரை-ஆங்கிலம்-இந்தி) ஸ்ரீலஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் 269-ஆம் ஆண்டு நினைவு மலர் 16—5—1957 | ,, |
| 8538 | அகத்தியர் தேவாரத்திரட்டு குறிப்புரையுடன் | ,, |
| 8539 | மகாமக மலர் | ,, |
| 8540 & 41 | திருஞான சம்பந்தர் வரலாறு (ஆங்கிலம்) | Published by Sri Kumaraguruparan [Sangam Srivaikuntam |
| 8542 | எது வேண்டும்? போரா? அமைதிய? (பைபிள்) | ஸ்ரீ சுவாமி சிவானந்த சரஸ்வதி |
| 8543 | வேதாகம விளக்கம் | பே. சா. தேவசகாயம் நாடார் |
| 8544 | திருவள்ளுவர் திருநாள்மலர் | தமிழ்மறைக் கழகம் - கொழும்பு |
| 8545 | சித்தர் சித்தாந்தம் | சாம்யவாதி சுவாமி விமலானந்தா அவர்கள் |
| 8546 | பதி பசு பாசப்பனுவல்—அளவையட்டவணை—பதி பசு பாசத்தொகை | பதிப்பாசிரியர் த. ச. மீனுட்சி சுந்தரம் பிள்ளை |
| 8547 | பிரமோத்தர காண்டம் | க. குருமூர்த்தி ஐயர் |
| 8548 | பார்க்கவ புராணமாகிய விநாயக புராணத்திலுள்ள தூர்வையாசகப்படலம் | ராம. சொ. சொக்கலிங்கம் செட்டியார் |

| | | |
|---|---|---|
| 8549 | “ சிதம்பரமஹாத்மியம் (வடமொழிக்கு நேர் மொழி பெயர்ப்பு | சிதம்பரம் C. S. ஸச்சிதானந்த தீக்ஷிதர் |
| 8550 | ஸ்வதர்மம் (நித்ய கர்மானுஷ்டான விதிகள்) | வெளியிட்டவர் ரா. ஸுப்பரத்னம் அய்யர் |
| 8551 | நாடீ சக்கிரம், (தமிழ்மொழி பெயர்ப்புடன்) | தஞ்சை ஸரஸ்வதி மஹால் வெளியீடு |
| 8552 | Stavaratnatrayam | K. S. Krishnamurti Sastri |
| 8553 | ஸ்ரீ ஹரதத்தர் சரித்திரம் (சுருக்கம்) | ஸ்ரீ ஹரதத்தர் பக்தஜன ஸபை, திருக்கஞ்சனூர் |
| 8554 | Hundred & Eight Upanisadas (Isa. etc.) | B. Shivprasad Raghoram Sarba. Hitaishi. [co., Ramghat, Benares City |
| 8555 | ஹிந்தி அனுவாதமாலா (பாகம்-1) தமிழ் அர்த்தம் | தெட்சிண பாரத ஹிந்தி பிரச்சார சபை |
| 8556 | அனுவாதமாலா | ,, |
| 8557 | ஹிந்தி பாடப்புத்தகம் | ,, |
| 8558 | ஹிந்தி பாடப்புத்தகம் (முதற் புத்தகம்) | ,, |
| 8559 | ஹிந்தி பாடப்புத்தகம் (இரண்டாவது புத்தகம்) | ,, |
| 8560 | கங்கா மகாத்மியமும் பத்ரிநாத் மகாத்மியமும் (ஹிந்தி) | சர்தார் ஹரம்சிங் வகையராக்கள் |
| 8561 | சப்தரத்ந மாலை (வடமொழி) | ,, |
| 8562 | மூஷிகவாக ஸ்தோத்திரம் (வகையரு) வடமொழி | S. சுப்பிரமணிய சாஸ்திரி |
| 8563 | நவக்கிரக அஷ்டோத்திர (வகையரு) வடமொழி | விசுவநாத சாஸ்திரி |
| 8564 | பக்தபாலகன் (ஹிந்தி) | கீதாபிரஸ் கோரக்பூர் |
| 8565 | ஸம்க்ஷேப-ராமாயணம் | ஸ்ரீ காஞ்சிகாமகோடி வெளியீடு |
| 8566 | பகவத்கீதை | தி. ஸ்வாமிநாத சாஸ்திரி |
| 8567 | ஸ்ரீ பஞ்சநத க்ஷேத்திரமென்னும் திருவையாற்றுத் தலவுண்மை (தத்துவம்) | இராம. கோவிந்தசாமி பிள்ளை |

| | | |
|---|---|---|
| 8568 & 69 | நவமணிகள் வெளியீட்டு விழாமலர் | திருவாவடுதுறை ஆதீனம் |
| 8570 & 71 | The Journal of The Tanjore Sarasvati Mahal Library Vol. XIII No. 2 & Vol. XIV. No.1 | T. M. S. S. M. Library Tanjore |
| 8572 | ஆடுதுறை ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப் பள்ளி ஆண்டு மலர் 1959 — 60 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி, [ஆடுதுறை |
| 8573 | ஸ்ரீமத்த ஹரதத்த சிவா சார்யார், ஸ்ரீமத் அகஸ்தியர் அஷ்டோத்திர சதநாமஸ்தோத்திரமும், நாமாவளியும் நாகரம்-தமிழ் | ஸ்ரீ ஹரதத்தர் பக்தஜன சபை-மைலாப்பூர் |
| 8574 | மதுரை சிலாசாசனத் திருமுறை | திருப்பனந்தாள்-ஸ்ரீ காசிமடம் |
| 8575 & 76 | சிவஞான போதம். | செல்வி. வயிநாகரம் இராம மீனாட்சி |
| 8577 | திருக்கயிலைத் திருவாசகம் (அப்பர் அருளியது) | திருப்பனந்தாள்-ஸ்ரீ காசிமடம் |
| 8578 | திருவிடைமருதூர் திருப்பனுவல்கள் | ,, |
| 8579 | ஔவையார் அருளிச் செய்த விநாயகர் அகவல் | ,, |
| 8580 to 8585 | கந்தர் அநுபூதி | ,, |
| 8586 & 88 | திருவண்ணாமலைத் தேவாரத் திருப்பதிகங்கள் (குறிப்புரையுடன் கூடியது) | ,, |
| 8589 to 95 | திருமயிலாடுதுறைத் தேவாரத் திருப்பதிகங்கள் (குறிப்புரையுடன் கூடியது) | ,, |
| 8596 & 97 | திருநள்ளாற்றுத் தேவாரத் திருப்பதிகங்கள் (குறிப்புரையுடன் கூடியது) | ,, |
| 8598 to 8612 | சிதம்பர விலாசம் (குறிப்புரையுடன் கூடியது | ,, |
| 8613 & 14 | சைவ தோத்திர மஞ்சரி | அருள்நந்திநிலைய வெளியீடு, வரகநகர்-திருச்சி |

| | | |
|---|---|---|
| 8615 to 29 | திருத்தென்குரங்காடு துறைத்திருப்பனுவல்கள் (மகா கும்பாபிஷேக வெளியீடு) | வெளியிடுபவர் ஆடுதுறை M. N. முத்தையஞ் [செட்டியார் |
| 8630 & 34 | திருஅரசிலித் திருப்பதிகம் | தருமபுர ஆதீனம் |
| 8635 | திருவண்ணுமலேத் திருப்பனுவல்கள்-குறிப்புரையுடன் கூடியது) | திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் |
| 8636 | தேவாரத் திருமுறைத் திரட்டு வெளியீடு - 1. | திருமுறைக் கழகம், சோழவந்தான் |
| 8637 | சொக்கேசர் மீனுட்சி தாலாட்டும்-இராமாயண குறமும் | சூடியம்மாள், மதுரை |
| 8638 | யாழ்ப்பாணம்-சமயாசாரியர் பாதயாத்திரை சபையினர் மதுரை திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனம் குரு மஹா சந்நிதானம் அவர்கட்கு சமர்ப்பித்த பத்திரம் | யாழ்ப்பாணம் சமயாசாரியர் பாதயாத்திரைச் [சபையினர் வெளியீடு–1960 |
| 8639 | கீரிமலே சிவன்கோவில் சிறப்பும், பன்னிரு திருமுறை திரட்டும் | கீரிமலே இந்து சமய விருத்திச் சங்கம் வெளியீடு |
| 8640 | திருவாதவூரடிகள் புராணசார ஆசிரிய விருத்தமும், திருப்பெருந்துறை ஸ்ரீ ஆன்மநாதர் இரட்டைமணி மாலேயும் | ஸ்ரீ சஷ்டி சுவாமிகள், பரிமணங்குடி |
| 8641 | திருச்செந்தூர் முருகன் பிள்ளேத்தமிழ் (உரையுடன்) 2-ம் பாகம் | தொகுத்தவர் சு. கணபதியாபிள்ளே |
| 8642 | திருவாசகம் | சைவ சித்தாந்த மகாசமாஜ வெளியீடு |
| 8643 | ஐந்தெழுத்து | தருமபுர ஆதீன வெளியீடு |
| 8644 | முருகன் என் காதலன் | பாலகவி. இராமனுதன் |
| 8645 | கழுக்குன்றக் காட்சி | இளவளழகனுர் |
| 8646 | கந்தர்சட்டி கவசம் | திருவிடைக்கழி ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி [தேவஸ்தானம் வெளியீடு |

| | | |
|---|---|---|
| 8647 | திருவெம்பாவை - திருப்பள்ளி யெழுச்சி (முன்னுரை யுடன்) | காஞ்சிபுரம் திருவள்ளுவர் செந்தமிழ் பாடசாலை [வெளியீடு |
| 8648 to 52 | சிவஞான போதம் | செல்வி. வயிநாகரம் இராம. மீனுட்சி |
| 8653 to 55 | மதுரைச் சிலாசாசனத் திருமுறை | திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் |
| 8656 | அறிவும் திருவும் | செல்வி. வயிநாகரம் இராம. மீனுட்சி |
| 8657 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா | அருள்நந்தி நிலைய வெளியீடு, வரகநகர்-திருச்சி [ராப்பள்ளி |
| 8658 | ஸ்ரீ சுப்ரமணியர் ஸ்தோத்திர மணிமாலை (ஏட்டுச்சுவடி யிலிருந்து எடுக்கப்பட்டது) முருகன் அடியார் பாடியது | பதிப்பித்தோர் மேயர் கம்பெனி மதராஸ் |
| 8659 | திருக்கழுக்குன்றத் திருப்பதிகங்கள் | தொகுத்தவர் திரு. மயிலப்ப செட்டியார் |
| 8660 | மெய்கண்ட தேவர் அருளிச்செய்த சிவஞான போதம் (உரைச் சுருக்கம்) | அருள்நந்தி நிலைய வெளியீடு, வரகநகர்-திருச்சி [ராப்பள்ளி |
| 8661 | மார்கழி பாராயணத் திரட்டு (குகஸ்ரீ பு. பா. ரசபதி உரையுடன்) | அமிர்தவசனி வெளியீடு |
| 8662 | முல்லைப்பாட்டு ஆராய்ச்சி அகராதி | இளவழகனுர் திரு. தி. சு. பாலசுந்தரம் பிள்ளை |
| 8663 | விநாயகர் அகவல் | திருவலஞ்சுழி விநாயகர் திருக்கோயில் மின் [விளக்கேற்று விழா வெளியீடு |
| 8664 | ஔவையார் அருளிச்செய்த குறள் மூலம் | பதிப்பித்தோர்-நாராயணசாமி பிள்ளை-மதராஸ் |
| 8665 | திருநாவுக்கரசு சுவாமிகளின் திருப்புகலூர்த் திருத் தாண்டகம் | அம்பாசமுத்திரம் K. A. சிவஞானம் பிள்ளை [யவர்கள் நினைவு மலர் |
| 8666 | திருஅருட்பா சரித்திரம் - உபதேசம் திருமுகம் | வடலூர் - உத்தரஞான சிதம்பரம் இராமலிங்க [மந்திர வெளியீடு |

| | | |
|---|---|---|
| 8667 | சைவ சித்தாந்தத்தின் தனிச்சிறப்பு | பழநி, சைவ சித்தாந்த சன்மார்க்க சங்கம்- [பாதிரிப் பிள்ளையார் கோவில் பழநி. வெளியீடு |
| 8668 | கூட்டுப் பிரார்த்தனை திரட்டு | தொகுத்தவர் அரு. உ. வீர. அழகப்ப செட்டியார் |
| 8669 & 70 | பட்டீஸ்வரம் துர்க்கையம்மைப் பதிகம் | சுவாமிமலை தேவாரம் ச. பாலசுப்பிரமணிய [தேசிகர் |
| 8671 | யாழ்ப்பாணத்து நல்லூர் கந்தர் சுவாமி பஞ்சரத்தினம் | உடுவில் தமிழ்ப் புலவர் பிரசங்க சபாமணி வ. [மு. இரத்தினேசுவர அய்யர் |
| 8672 | திருமுறைச் சுருக்கம் | தொகுத்தது. பாரத்வாஜி S. ராமஸ்வாமி |
| 8673 | ஸ்ரீ நடராஜ சிவகாமசுந்தரி அஷ்டோத்திரம் (சமஸ்கிருதம்) | சச்சிதானந்த சரஸ்வதி ஸ்வாமிகள் |
| 8674 | ஸ்ரீ நடராஜ சஹஸ்ரநாமாவளி | சோம. சேதுதீக்ஷிதர் |
| 8675 | ஸ்ரீ நடராஜசஹஸ்ர நாம பாஷ்யம் (முதல் பாகம்) | சாஸ்திராசாரிய சிவ. ஆனந்த தாண்டவ தீக்ஷிதர். சாஸ்திராசாரிய ராஜாசோமசேகர தீக்ஷிதர். |
| 8676 | அபிராமி அந்தாதி | தருமபுர ஆதீன வெளியீடு [சிதம்பரம் |
| 8677 | நக்கீரர் அருளிய திருமுரு காற்றுப்படை-திருஞானசம்பந்தர் அருளிய கோளறு திருப்பதிகம் | ,, |
| 8678 | விநாயக கவசம் | கலைமகள் பதிப்பு-திருவொற்றியூர் சென்னை |
| 8679 | முருகன் முந்நூல்—திருமுருகாற்றுப்படை, கந்தர்கலி வெண்பா, கந்தர் அநுபூதி | முத்தமிழ் அச்சகம்-காஞ்சி |
| 8680 | குருகுலப் பாட்டு (நாமாவளி) | குருகுலம், மாம்பாக்கம் |
| 8681 | விநாயகர் அகவல் | பதிப்பாசிரியர் தா. ம. வெள்ளைவாரணம் |
| 8682 | அருளும் பொருளும் | செல்வன் இராம. திருநாவுக்கரசு |
| 8683 | கர்மோபாசன ஞானத்தொகுதி | க. வேதாசல சுவாமிகள் |

| | | |
|---|---|---|
| 8684 | நால்வர் அஷ்டோத்திரம் | திருச்செந்தூர் ஆலால சுந்தரர் சிவாசாரிய |
| 8685 | திருவானைக்காத் திருப்பனுவல்கள் (திருவானைக்கா கும்பாபிஷேக வெளியீடு) | திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் [சங்க வெளியீடு |
| 8686 | ஸ்ரீ ஷண்முகர் அஷ்டோத்திரம் | திருச்செந்தூர் ஆலால சுந்தரர் சிவாசாரியசங்க [வெளியீடு |
| 8687 | துர்க்கா ஸகஸ்ரநாமம் | சிரோமணி-காசிவிசுவநாத சாஸ்திரிகள் |
| 8688 | கீதையின் சாரம் | ச. கு. கணபதி அய்யர், எம். ஏ., |
| 8689 | (1) திருப்பெருந்துறை ஸ்ரீயோகம்பிகை ஆசிரிய விருத்தம் (2) பிரபந்தத் திரட்டு (3)பரிமணங்குடி ஸ்ரீ சண்முகநாத சுவாமி தேவஸ்தான வரலாறு (4) ஸ்ரீ குருமணிகள் சரித்திரத்திரயசாரம் (5) ஸ்ரீ ஆறுமுகர் உபாசனைவகையரு | திரு. மு. மு. முத்துப் பிள்ளை என்கிற சஷ்டி [அடிகள், பரிமணங்குடி |
| 8690 to 91 | தேவாரத் திருமுறைத்திரட்டு (வெளியீடு 1) | திருமுறைக்கழகம், சோழவந்தான் |
| 8692 | விநாயகர் மஞ்சரி | திருமயிலை சே. வே. ஜம்புலிங்கம் பிள்ளை |
| 8693 | கைவல்ய நவநீதம் மூலம் (ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் அருளிச்செய்தது) | அ. இராமசாமிச் சுவாமிகள் |
| 8694 | ஸ்ரீ பஞ்சாக்ஷர அஷ்டாக்ஷர மந்த்ரார்த்த ஸங்க்ரஹ விளக்கம் | ஸ்ரீ சிவஅருணசிவயோகி அவர்கள் இயற்றியது [திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் |
| 8695 to 97 | திருவாசக பூசாவிதி (ஆறுமுகநாவலர் இயற்றியது) | பதிப்பாசிரியர்: சே. வே. ஜம்புலிங்கம் பிள்ளை |
| 8698 | நித்தியப் பாராயணத் திரட்டு | தொகுத்தது அ. த. பாஷியம் செட்டி |
| 8699 | சிவப்பிரகாச மூலமும் விளக்கப் பொழிப்பும் (உமாபதி தேவநாயனார் அருளிச்செய்தது) | திருநெல்வேலி சிவபூசைச் செல்வர் திருக்கூட்ட [வெளியீடு |

| | | |
|---|---|---|
| 8700 | பாராயணத் திருப்புகழ் | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரன் சங்கீத திருப்புகழ் சபா 9வது ஆண்டுவிழா நினைவுமலர் 1127ம்ஸு |
| 8701 | வேதாந்தம் | காரைக்குடி ராம. சொ. சொக்கலிங்கச் [தைமீ |
| 8702 | முருகனின் பெருமை | ஸ்ரீ சுவாமி சிவானந்தா [செட்டியார் |
| 8703 | பன்னிரு திருமுறை மன்றம் முதல் ஆண்டுவிழா மலர் (30—12—55) | பன்னிரு திருமுறை மன்றம், மதுரை |
| 8704 | பிரஹ்மாண்ட புராணத்திலுள்ள துளஸி ஸ்தோத்ரம் | ஸ்ரீ சங்கரசாந்தி பீடம் சென்னை–2 |
| 8705 | திருவேரக [சுவாமிமலை] நவரத்நமாலை | ஸ்ரீ சுவாமிநாதசுவாமி தேவஸ்தானம் வெளியீடு |
| 8706 | திருவெம்பாவை – திருப்பள்ளி யெழுச்சி (ஸ்ரீலஸ்ரீ ஆனந்த பரவச தேசிக ஸ்வாமிகள் குருபூஜை விழா மலர்) | தருமபுர ஆதீனம் [சுவாமிமலை |
| 8707 | திருவாசக சிவபுராண விரிவுரை (உரையாசிரியர் குகஸ்ரீ ரசபதி) | மதுரை ஸ்ரீ மீனாட்சிசுந்தரேஸ்வரர் தேவஸ்தான [வெளியீடு |
| 8708 | திருக்கயிலாய யாத்திரை நினைவுச் சின்னங்களின் திறப்புவிழா | தருமபுர ஆதீனம் |
| 8709 | கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் - மகாராஜபுரம்-வேதாரண்யம் 12-ம் ஆண்டு அறிக்கை 1958 — 59 | கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் [மகாராஜபுரம் வேதாரண்யம் |
| 8710 | சிவப்பிரகாசம்-உரைநடை (விளக்கக் குறிப்புகளுடன்) | திருவாவடுதுறை ஆதீனம் |
| 8711 | சித்தாந்தவுந்தியார் (மெய்கண்டார் கழக வெளியீடு) | ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர் |
| 8712 & 13 | திருவிடைக்கழி ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமித் தலத்தின் ஸ்தல புராணம் வரலாறும் க்ஷேத்திர மகாத்மியமும் (12—7—54)-உ அஷ்டபந்தன மகா கும்பாபிஷேக வெளியீடு | திருவிடைக்கழி ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி [தேவஸ்தான வெளியீடு |

| | | |
|---|---|---|
| 8714 & 15 | திருப்புலியூர் வெண்பா-மூலமும் உரையும் | ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள் |
| 8716 | செயங்கொண்டார் வழக்கம் (குறிப்புரையுடன்) | ஷ |
| 8717 | முத்தநாயனர் திருவிரட்டை மணிமாலை-உரையுடன் | திருவாவடுதுறை ஆதீனம் |
| 8718 | நெல் குருத்துப் புழு | சென்னை விவசாய செய்தி நிலைய வெளியீடு |
| 8719 | மார்க்கண்டேயர் புராணம் (சுருக்கம்) | நடன குஞ்சிதபாத சபை வெளியீடு |
| 8720 | சிதம்பரமஹாத்மியம் (வடமொழிக்கு நேர் மொழி பெயர்ப்பு | ஷ |
| 8721 | சூரியமூலை ஸ்ரீஉலகநாயகியம்மை சமேத சூரிய கோடீச்சுரர் பதிகம் | மு. பாலசுப்பிரமணியன் |
| 8722 | வேதங்களின் தத்வம் | நடனகுஞ்சிதபாத சபை வெளியீடு |
| 8723 | ஸ்ரீ அபிராமி அந்தாதி | திருக்கடவூரில் நடந்த திருமண அன்பு அளிப்பு |
| 8724 | ப்ரம்ஹ வித்யை | நடனகுஞ்சிதபாத சபை வெளியீடு |
| 8725 | The views of the Sri Sankara Gurukulam Srirangam | Sri Sankara Gurukulam, Srirangam |
| 8726 | திருமுருகாற்றுப் படை விளக்கம் (ஆசிரியரின் மணி விழா மலர்) | R. பஞ்சநதம் பிள்ளை |
| 8727 | உடையவர் கோயிலென்று வழங்கும் ஸ்ரீ சுவேதபுர க்ஷேத்திரத் தோத்திரப்பிரபந்தம் | ஸ்ரீமான் முத்துப்பிள்ளை |
| 8728 to 36 | ஸ்ரீ அருள்நந்தி சுவாமிகள் பிரபந்தங்கள் (61 வது ஜன்ம நட்சத்திர திருநாளன்று சமர்ப்பித்த அன்பு மலர்த்தொகுதி | செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள் |
| 8737 | முருகப்பெருமானது தனிப் பெருங்காட்சி (முருகப் பெருமானது திருக்காட்சியும் தமிழ் எழுத்துக்கள் முப்பத்து மூன்றும்) | டாக்டர் தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை |

| | | |
|---|---|---|
| 8738 | பார்வதி பரணியமென்னும் விஷ வைத்திய சிந்தாமணி | சிறுமணலூர் முனிசாமி முதலியார் இயற்றியது |
| 8739 | பணத்தின் மாண்பு | வித்துவான், பாலூர் து. கண்ணப்ப முதலியார் |
| 8740 | அமெரிக்காவைப் பற்றிய உண்மைகள் | தமிழாக்கம் D. தோத்தாதிரி |
| 8741 | பாடுபட்டால் சமாதானம் கிட்டுவது உறுதி | பால்ஜி ஹாப்மன் |
| 8742 | நீதிசாரம் மூலமும்-உரையும் புன்னை வனநாத முதலியார் எழுதிய குறிப்புரையுடன் | சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக வெளியீடு |
| 8743 | அமெரிக்க நீக்கிரோ | Higginbathams LTD. Madras |
| 8744 | விஞ்ஞான வெளிப் பாட்டுவழி | C. T. பிலிப் M. A., தமிழாக்கம் G. வேத [நாயகம் JOB. M. A., L. T., |
| 8745 | திருவாய்மூர்க் கோயில் வரலாறு (கும்பாபிஷேக வெளியீடு | திருவாய்மூர்க்கோயில் வெளியீடு |
| 8746 | ஸேது சரித்திரச் சுருக்கம் (வேத சாஸ்திர ஆதாரங் களுடன்) | இராமேஸ்வரம் வெ. வைத்யநாத வாத்தியார் [தொகுத்தது |
| 8747 | பாண்டி நாட்டுக் கோயில்கள் . | வித்வான், பாலூர் கண்ணப்ப முதலியார் |
| 8748 | சிவாலயவழி பாட்டு வீளக்கமும் தோத்திரப் பாடல் களும் | கயப்பாக்கம் - திரு. சோமசுந்தரம் செட்டியார் |
| 8749 | அகஸ்திய முனிவர் திருவாய் மலர்ந்தருளிய வயித்திய ரத்தினச் சுருக்கம் (360) | பதிப்பாசிரியர், இரத்தினவேலு முதலியார் |
| 8750 & 51 | கலைக்கூடம்-தஞ்சை-அரண்மனைக் கட்டிடம் கலை விழா சிற்ப மடல் (படங்களுடன்) | தஞ்சை-கலைக்கூடம் |
| 8752 | மனிதர்களின் வாழ்க்கை விளக்கம் | N. சுப்பையா பிள்ளை |
| 8753 | அபிநயதர்ப்பணம் (நந்திகேசுவரர் இயற்றியது) மூலமும் உரையும் | தமிழ் மொழிபெயர்ப்பு வீரராகவையன் |

| | | |
|---|---|---|
| 8754 | வான நூல் | அ. சுந்தரமூர்த்தி M. A., |
| 8755 | மேலகரம் திரிகூட ராசப்பக் கவிராயர் இயற்றியருளிய திருக்குற்றால நாதருலா - குறிப்புரையுடன் | டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய [வெளியீடு |
| 8756 | கண்ணுசாமியம் என்னும் வைத்தியசேகரம் | சி. கண்ணுசாமிப் பிள்ளை |
| 8757 | ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுள் க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழ் | திருவாவடுதுறை ஆதினம் |
| 8758 | ஞானசாத்திரங்கள் | தருமபுர ஆதினம் |
| 8759 | ஸ்ரீ புவனம்பிகை கலைக்ஞான திபம் | ,, |
| 8760 | சமயபோதச் சொற்பொழிவுகள் | ,, |
| 8761 | ஆருவது திருமந்திர மாநாட்டு மலர்-விளம்பி மார்கழி | திருவாவடுதுறை ஆதினம் |
| 8762 | திருவிளமர்த் திருப்பதிகம் | தருமபுர ஆதீனம் |
| 8763 | திருநெல்லிக்காத் திருப்பதிகம் | ,, |
| 8764 | திருஎருக்கத்தம்புலியூர்த் திருப்பதிகம் | ,, |
| 8765 & 66 | திருக்குடலையாற்றூர்த் திருப்பதிகம் | ,, |
| 8767 to 73 | திருஅறையணிநல்லூர்த் திருப்பதிகம் | ,, |
| 8774 | திருநெல்வாயில் அரத்துறை திருப்பதிகங்கள் | ,, |
| 8775 | திருக்குடவாயில் திருப்பதிகம் | ,, |
| 8776 | திருப்பேரையில் திருப்பதிகம் | ,, |
| 8777 | திருப்பரிதி நியமம் திருப்பதிகம் | ,, |
| 8778 to 81 | ஸ்ரீ கங்கைகொண்ட சோளேச்சரத் திருவிசைப்பா | ,, |
| 8782 & 83 | தக்ஷிணாமூர்த்தி திருவருட்பா (மகாகும்பாபிஷேக மலர்) | ,, |

| | | |
|---|---|---|
| 8784 | பிரெஞ்சிந்தியா தேவஸ்தானங்களின் பஞ்சாயத்து விசாரணையை சீர்திருத்தஞ் செய்யுஞ் சட்டம் (மொழி பெயர்ப்பு) | Niyayabimany Press Karikal |
| 8785 | ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் வரலாறு | கயப்பாக்கம், திரு. சோமசுந்தரம் செட்டியார் |
| 8786 | Tamil culture - Vol. IV No. 2. - April 1955 | Journal of the Academy of Tamil culture |
| 8787 | Sivananda The yogi of India | The yoga vedanta forest Academy- [Rishikesh - Himalayas |
| 8788 | அனுபவ வைத்தியமுறை (பாகம் - 4) | Madras Government Oriental series |
| 8789 | தென்னிந்திய கோயிற் சாசனங்கள் - பாகம் II | Do Series CXXI [No. LXXXVI |
| 8790 | The Journal of The Tanjore Saraswathi Mahal -Library Vol. X No. 1. | T. M. S. S. M. Library - Tanjore |



உ

திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'



| | | | ரூ. ந. பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் | ... | 6 00 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 00 |
| 4 | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) | ... | 2 50 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, | ... | 2 25 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) ,, | ... | 1 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) ,, | ... | 0 50 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பா திருப்பல்லாண்டு (மூலம்மட்டும்) | ... | 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | ... | 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை ,, | ... | 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... | 2 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு | ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) | ... | |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, | ... | 2 75 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் ,, | ... | 2 00 |
| 21 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 24 | கந்தரனுபூதி | ... | 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... | 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் | ... | 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலம் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் ,, | ... | 2 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | ... | 1 00 |
| | டி 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 00 |

Registered With the Registrar of Newspapers for India
Under No R. No. 1485/57.

Regd No. M. 5574 குமரகுருபரன்.

| | | | |
|---|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை - மதுரை மீனாட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை - தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் [அச்சில்] | | |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... | |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் | ... | 2 75 |
| 54 | ஷை ஷை காமத்துப்பால் | ... | 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோவில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் – '61.